ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 137-138

ஆசிரியர்:

ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச்சந்தா ரூ. 5.







1960௵ மே, ஜூன்௴ சார்வரி௵ வைகாசி, ஆனி௴

# ஸ்ரீ ராமாநுஜன் 137-138.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சி. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 12 | 1960ஞு மே, ஜூன்மீ<br>சார்வரிஞு வைகாசி, ஆனிமீ | மலர் 5, 6 |
|---|---|---|

## திருவாய்மொழி நூற்றந்தாதி. பா—28.

முடியாத வாசைமிக முற்று கரணங்கள் *
அடியார் தமைவிட் டவன்பால்—படியா *
ஒன்றொன்றின் செயல்விரும்ப உள்ளதெல்லாம் தான்விரும்ப *
துன்னியதே மாறன்றன் சொல். (28)

| | | | |
|---|---|---|---|
| முடியாத ஆசை மிக | ஆராத காதல் அதிசயிக்க | உள்ளது எல்லாம் தான் விரும்ப | கரணங்களின் விடாய் முழுவதையும் ஆழ்வார்தாமுடையராதலை விரும்ப |
| முற்று கரணங்கள் | எல்லா இந்திரியங்களும் | மாறன் தன் சொல் | அவ்வாழ்வாருடைய ஸ்ரீஸூக்தி |
| அடியார்தமை விட்டு | பாகவதர்களை விட்டு | துன்னியது | (வருத்தத்தினால்) நெருக்க முற்றது. |
| அவன் பால் | —அவ்வெம்பெருமான் பக்கலிலே | | |
| படியா | —படிந்து | | |
| ஒன்று ஒன்றின் செயல் விரும்ப | ஒரு கரணம் மற்றொரு கரணத்தின் விருத்தியை ஆசைப்பட | | |

* * *—* செய்ய தாமரைக் கண்ணனென்கிற (3–6.) திருவாய்மொழியில் "என்று கொல் கண்கள் காண்பதுவே" என்று கிளர்ந்த ஆசை (3–7) * பயிலுஞ் சுடரொளியில் தணியாதே அதிகரிக்க, பாஹ்யம் ஆப்யந்தரம் என்னும் வாசியின்றிக்கே ஸகல கரணங்களும் எம்மை யாளும் பரமர் * எம்மை யாளுடை நாதர் * எம்மையாளுடையார்கள் * * எம்பெருமக்கள் * எம்மை யளிக்கும் பிராக்கள் * எம்மைச் சன்மசன்மாந்தரங் காப்பர் * * எம்மை நாளுய்யக் கொள்கின்ற நம்பர் * எமதொழு குலந்தாங்கள் * அடியாரெம்மடிகள் * * அடியார் தம்மடியாரடியோங்கள் * என்றிப்படி ஸகல ப்ரகாரத்தாலும் சேஷிகளாக அநுஸந்திக்கப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களை விட்டு எம்பெருமான் பக்கலிலே யவகாஹித்து [கரணங்களும் தாமும் தத்விஷயத்திலே ப்ரவணராய்] ஓர் இந்திரியத்தினுடைய வ்ருத்தியை மற்றையிந்திரியங்களும் ஆசைப்பட்டும் அவை எல்லாவற்றினுடைய வ்ருத்தியையும் தாம் ஆசைப் பட்டும்ஆழ்வார் அவஸாதத்தோடே அருளிச் செய்யும்படி யாயிற்று * முடியானே என்கிற திருவாய்மொழி என்றபடி.

"முடியாதவாசைமிகு" என்றும் பாடமுண்டு; அப்போது கரணங்களுக்கு அடைமொழியாக அந்வயிக்கும். படியா—செய்யா என்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம்; படிந்து என்றபடி. 'துன்னியது' 'துன்றியது' என இருவகையான பாடமும் காண்கிறது; பொருள் ஒன்றே; நிர்வேதம் மிக்கது என்றபடி.

கீழ் ஆருந் திருவாய் மொழியான * செய்ய தாமரைக் கண்ணனில் "அன்று தேர் கடவிய பெருமான் கனைகழல் காண்பதென்று கொல் கண்களே" என்று பகவத் விஷயத்திலே தமக்கு உண்டான விடாயை வெளியிட்ட ஆழ்வார்க்கு எம்பெருமான் ஸ்ரீவைஷ்ணவர்களைக் காட்டிக்கொடுத்து ஒருவாறு ஸமாதானம் பண்ணினபடி கீழ்த் திருவாய்மொழியில் சொல்லிற்று. அதில் ஸ்ரீவைஷ்ணவர்களை அனுபவித்துப் போந்த ஆழ்வார் அவர்களுகந்த விஷயமான பாகவத விஷயத்தின் சீர்மையையும் பாசுரந்தோறும் முன்னடிகளால் அநுபவித்து வந்தாராகையாலே அவ்வநுபவம் பழைய விடாயை அதிகரிக்கச் செய்தது; "என்று கொல் கண்கள் காண்பதுவே" என்னும்படி கண்களுக்கு மாத்திரம் உண்டாகியிருந்தவிடாய் மற்றை யிந்திரியங்கள் எல்லாவற்றுக்குமாயிற்று; அது தானும் ஒரு விலக்ஷணமான படியிலேயாயிற்று. அதாவது என்னென்னில்; ஒரு இந்திரியத்தினுடைய விருத்தியை மற்றோரிந்திரியம் ஆசைப்படும்படியாயும் சேர்ந்து, தம்மிலும் விடாய்த்த கரணங்களும் கரணங்களிலும் விடாய்த்த தாமுமாய் இப்படியொரு விலக்ஷணமான நிலைமையைப் பெறும்படியாயிற்று.

பஹுகுடும்பியான ஒருவன் க்ஷாமகாலத்திலே தன்பசிக்கு ஆற்ற மாட்டாதே மக்கள் பசிக்கு ஆற்ற மாட்டாதே அவற்றின் வாயில் சோற்றைத் தான் பறித்து உண்பது, தன் வாயில் சோற்றை அவை பறித்துண்பதாய், 'என்பசிக்கு என செய்வேன்? என்மக்கள் பசிக்கு என் செய்வேன்' என்னுமாபோலே தாமும் தம்முடைய கரணக்ராமமுமாக நோவுபட்டுக் கூப்பிடுகிற படியை இத்திருவாய்மொழி பேசுகின்றது. இப்பதிகத்தினால் ஆழ்வாருடைய பக்தி பரமவிலக்ஷணம் என்பது பெறப்படும். ஆசார்யஹ்ருதயத்தில் (இரண்டாம் பிரகரணத்தில்) "அச்சேத்யமென்னுமது ஈரும் வேம் ஈரியாயுலர்த்த வென்னப்பட, சித்தம் சித்தாய் அல்லேனென்று நீக்க, கரணங்கள் முடியானேயிலவையாக உடலம் ஆத்ம தர்மங் கொள்ள, காற்றுங் கழியுங் கட்டியழக் கொண்ட பெருங்காதலுக்குப் பத்திமை நூல் வரம்பில்லையே" என்ற சூர்ணிகை இங்கு அநுஸந்திக்கவுரியது. ஆழ்வானுடைய வரதராஜஸ்தவத்தில் "த்வக்ச த்ருக் ச நிபிபாஸதி ஜிஹ்வா விஹ்வலா ச்ரவணவத் பவத்ருகதௌ, நாஸிகா த்வயி கிச தத்தேதி ப்ராப்நுயாம் கதம் இமாம் ஸ்திதவஸ்தாம்*" (24) என்ற ச்லோகமும் இங்கு நினைக்கத் தக்கது. .... .... .... *

---

## திருவாய்மொழி நூற்றந்தாதி. பா—29.

சொன்னாலில் வாழ்புலவீர் சோறுகூ றைக்காக *
மன்னாத மானிடரை வாழ்த்துதலால்—என்னாகும் *
என்னுடனே மாதவனை ஏத்து மெனுங்குருகூர் *
மன்னருளால் மாறுஞ் சன்மம். (28)

| | | | |
|---|---|---|---|
| நாவில் | —"நாக்கிலே | என் ஆகும் | என்ன பயனுண்டாகும்? (ஒன்றுமில்லையாம்) |
| சொல் | —இனிய கவி மொழிகள் | | |
| வாழ் | —விளங்கப்பெற்ற | என்னுடனே | —என்னுடன் கூடி |
| புலவீர் | —பண்டிதர்களே! | மாதவனை | —திருமாலை |
| சோறு கூறைக்கு ஆக | சோற்றுக்கும் துணிக்குமாக | ஏத்தும் | —ஏத்துங்கள்" |
| | | எனும் | —என்று உபதேசித்த |
| மன்னாத மானிடரை | நிலை நின்று ஜீவிக்கமாட்டாத மனிசர்களை | குருகூர் மன் | திருநகரிக்குத் தலைவரான ஆழ்வாருடைய |
| | | அருளால் | —கிருபையினாலே |
| வாழ்த்துதலால் | —கவி பாடிப் புகழ்வதனால் | சன்மம் மாறும் | —பிறவித்துயர் தொலையும். |

* * *—வாக்கிலே கவன சாதுரியமுடையவர்களாய், அந்தக் கவித் திறமையை பகவத் விஷயத்திலே செலுத்தாமல் அல்பாயுஸ்ஸுக்களான மனிசர்களிடத்திலே செலுத்திக் காசுங்கறையுடைக் கூறைக்குமங்கோர் கற்றைக்கு மாசையினால் அவர்களைத் துதித்துக் கொண்டு திரியும் புலவர்களை விளித்து, அந்தோ! நீங்கள் இங்ஙனம் பயனற்ற செயலைச் செய்து திரிவது தவிர்ந்து என்னைப்போல் எம்பெருமானைத் துதித்து வாழுங்கள் என்று * சொன்னால் விரோதப் பதிகத்தில் ஆழ்வார் உபதேசித்தபடியைக் கூறி, அப்படிப்பட்ட ஆழ்வாருடைய திருவருளுக்கு நாம் இலக்காகப் பெற்றோமாகில் நம்முடைய பிறவித்துயர் நீங்குமென்று அருளிச் செய்தாராயிற்று.

ஆழ்வார் சில ஸமயங்களில் தம்முடைய இழவுக்கு வருந்துவர்; சில ஸமயங்களில் ஸம்ஸாரிகளின் இழவுக்கு வருந்துவர். கீழ்த் திருவாய்மொழியில் தம்முடைய கிலேசங்களுக்குக் கதறினார்; இத்திருவாய்மொழியில் ஸம்ஸாரிகளின் கிலேசங்களுக்குக் கதறுகிறார். கவி பாடும்படியான திறமையைப் பெற்று வைத்து அந்தத் திறமையை பகவத் விஷயத்திலே செலுத்தாமல் க்ஷுத்ர பலன்களை விரும்பி அற்ப மனிதர் விஷயத்திலே செலுத்தி "நரஸ்துதி செய்பவர்கள்" என்று இழிவான பெயரைப் பெற்று உலாவுவாரைக் கண்டு வருந்தி, அவர்களையும் உபதேசத்தாலே திருத்தி பகவத் விஷயத்தில் கவி பாடுகின்றவர்களாக ஆக்கி உய்விப்பான் வேண்டி அவர்களை விளித்து இப்படி நீங்கள் உங்களது வாக்கை நீஸ விஷயங்களில் உபயோகித்து அதோகதியடைவது தகுதியன்று; உயர்வற உயர்நலமுடையவனான எம்பெருமான் விஷயத்திலே உங்கள் கவன சாதுரியத்தைச் செலுத்துவதே நன்று— என்று உபதேசித்தருளினர் * சொன்னால் விரோதப்பதிகத்திலென்றதாயிற்று.

உலகத்தில் ஜ்ஞாதாக்களாக இருப்பது அரிது; அது வாய்த்தாலும் கவிபாடும்படியான ஸாமர்த்தியம் பெறுவது மிகவும் அரிது. அந்த ஸாமர்த்தியம் பெற்றவர்கள் வகுத்த விஷயத்தில் தங்கள் வாக்கை விநியோகப்படுத்தாமல் க்ஷுத்ர நரஸ்துதிகளிலே விநியோகிப்பது மிகவும் அருவருக்கத்தக்கதாகும். வட மொழியில் "ப்ரதாபருத்ரீயம்" என்கிற ஒரு க்ரந்தம் மிகவும் ப்ரஸித்தமானது. இதை இயற்றிய கவியின் பாண்டித்யமும், கவித் திறமும் மிக வியக்கத்தக்கதே. ஆயினும் இந்த க்ரந்தம் எம்பெருமானுடைய குணகீர்த்தனத்தில் அமைந்திருந்தால் அழகிதாயிருக்கும்; அங்ஙனன்றியே, அல்பப்ரயோஜனத்தைக் கணிசித்து ஒரு க்ஷுத்ரப்ரபுவை விஷயீகரித்து இந்த நூல் பிறந்ததாதலால் பகவத் பக்தர்கள் ஜுகுப்ஸைப்படும்படியாகவுள்ளது. இப்படிப்பட்ட கர்ஹணீய க்ரந்தங்கள் உலகிற் பல பலவுள்ளன. இத்தகைய நூல்களை இயற்றும் கவிகள் பக்கலில் ஆழ்வாருக்குண்டாகும் சீற்றம் அபாரம். ஆழ்வார் தம்முடைய திருவாக்கு பகவத் விஷயத்திலே உபயோகப்படுகின்ற வளவுக்கு உகந்து, மற்றையோர் எக்கேடு கெட்டாலும் அதைப்பற்றிச் சிந்தியாமல் "ஆரானுமாதானுஞ் செய்ய, அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்தலாவதே!" என்று பெரிய திருவந்தாதியில் தாமே அருளிச் செய்தபடி ஸம்ஸாரிகளைப்பற்றிக் கவலை கொள்ளாமல் இருக்கலாம்; அப்படியிருக்கும் ப்ரக்ருதியன்று ஆழ்வாரது.

ஆசார்ய ஹ்ருதயத்தில் (மூன்றாம் ப்ரகரணத்தில்) "நண்ணாதார் மெய்யில்............ அடைவுகெட அதபஸ்கர்க்கு உபதேசிக்கிறவிது ஞாலத்தார் பந்தபுத்தியும் அநர்த்தங்கண்டு ஆற்றாமையும் மிக்க க்ருபையுமிறே." என்கிற சூர்ணிகையினால் விமுகரான ஸம்ஸாரிகளுக்கும் ஆழ்வார் உபதேசித்தருள்வதற்குக் காரணங்கள் நிரூபிக்கப்பட்டமை காண்க. ஆழ்வார் தாம் அநுபவிக்கும் பகவத் விஷயம் தனியே அநுபவிக்கக் கூடியதல்லாமையாலே"

* மச்சித்தா மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம் * என்று கீதாசார்யன் பணித்தபடியே பிறரோடு உசாவியே போதுபோக்கித் தரிக்க வேண்டியவரானதால் அப்படிப்பட்ட அதிகாரிகளைப் பெறுதற்காக நாற்புறமும் கண்வைத்துப்பார்த்தார். எல்லாரும் ஸம்ஸாரிகளாயிருந்தனர். நரஸ்துதியிலே ஊன்றி அல்ப ப்ரயோஜனங்களைப் பெற்று ஒழிபவர்களாயிருந்தனர்; அன்னவர்களைக் கண்டவாறே * வாளேறு காணத் தேளேறு மாயுமாப்போலே தம் இழவை மறந்தார்; பிறர்படும் அநர்த்தங்கண்டால் அத்தைப் பரிஹரித்துப் பிறகு தம் இழவைப் பரிஹரித்துக் கொள்ள நினைக்குமவராகையாலே உபதேசத்தாலே அவர்களையும் திருத்திக் கைக்கொள்ளப் பார்க்கிறார். உபதேசித்த வளவிலும் அவர்கள் திருந்தக் காணாமையாலே இவர்களைப் போலன்றியே நான் எம்பெருமானையே கவிபாடப் பெற்றேனே! என்று தம்மைப்பற்றின உகப்போடே தலைக்கட்டினபடியையருளிச் செய்தாராயிற்று. (*)

## திருமலை திருப்பதியில் ஜீயர் ஸ்வாமிகளின் ஆஸ்தானலங்கரணம்.

சார்வரி நாமஸம்வத்ஸரம் சித்திரை மீ 9௳ (21—4—60) க்ருஷ்ணபக்ஷ ஏகாதசி வியாழக்கிழமை யன்று ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி, திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமி தமது எண்பத்தாறுவது திருநக்ஷத்திரத்தில் திருநாடலங்கரித்தார். இந்த ஸ்வாமி ஆச்ரம ஸ்வீகாரம் செய்தருளி ஏறக்குறைய முப்பத்தைந்து ஸம்வத்ஸரமாயிற்று 7, 8 வருஷகாலம் சிறிய ஜீயர் பதவியில் எழுந்தருளியிருந்து பிறகு 25 ஸம்வத்ஸரங்களுக்கு மேலாகப் பெரிய ஜீயர் ஆஸ்தானத்தில் அமர்ந்திருந்தார். இந்த ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் ஸலிப்பேரி ராகவாசாரியர் ஸ்வாமி யென்று ப்ரஸித்தராய், திருக்கண்ணபுரம் சௌரிப் பெருமாள் தேவஸ்தானத்திற்குப் பல வருஷம் தர்மகர்த்தவாக எழுந்தருளியிருந்தார். பரிபூர்ண வேதாத்யாயியாய் சனபடியாக விளங்கினவர். நாலாயிர திவ்ய ப்ரபந்தத்திலும் நிகரற்ற நிபுணர். ஸர்வ ப்ரகாரத்தாலும் இந்த ஸ்வாமி இந்த ஆஸ்தானத்திற்கு மிகவும் அர்ஹராக எழுந்தருளியிருந்தார்.

எண்பத்தைந்து திருநக்ஷத்ரங்களுக்கு மேற்பட்ட பருவத்திலுங்கூட * தெழிகுரலருவித் திருவேங்கடத் தெழில்கொள் சோதி யெந்தை தந்தை தந்தையின் வழுவிலா வடிமைகளில் ஆர்வங்கொண்டிருந்தவர் இந்த ஸ்வாமி. சென்ற திங்களில் திருமலையில் திருவேங்கடமுடையானுக்கு நடந்த தெப்பவுத்ஸவத்தில் மங்களாசாஸனம் செய்து திரும்புகையில் சருக்கி விழுந்து திருவடியில் சிறிது காயம்பட்டதென்பதுதான் வியாஜம். அது முதலாகத் திருமேனியில் அசக்தியுண்டாயிற்று. திருநாட்டுக்கெழுந்தருளினவன்று காலை சிகித்ஸைக்காகப் புத்தூருக்கெழுந்தருளியிருந்து கட்டு கட்டி ஒன்பது மணிக்குக் கீழைத் திருப்பதி மடம் சேர்ந்து நாற்காலியில் வீற்றிருந்து அசக்தி அதிகமாயிருக்கிறதென்று ஸாதித்துக்கொண்டே 10 மணிக்குத் திருநாடலங்கரித்தாயிற்று.

உண்மையில் இந்த ஸ்வாமியினுடைய விச்லேஷம் திருவேங்கடமுடையானுக்கு மிகவும், அஸஹ்யமாகவேயிருக்கும். இதுவரையில் சின்ன ஜீயர் ஆஸ்தானத்தை அலங்கரித்திருந்த ஸ்வாமி அன்றே பெரிய மடத்தை அலங்கரித்தாயிற்று. திருநாடலங்கரித்த ஸ்வாமியின் சரமகைங்கரியங்கள் குறையற நடந்தேறின.

பூர்வாச்ரமத்தில் ஸாது, ராமாநுஜாசார்யஸ்வாமி யென்று ப்ரஸித்தரும் இதுவரையில் சின்ன ஜீயர் மடாதிபதியுமான ஸ்வாமி பெரிய ஜீயர் ஸ்வாமியாஸ்தானத்தை அலங்கரித்தருளியாயிற்று. 15–5–60 தேதியில், ஸ்ரீவில்லிபுத்தூர். உ.வே. கிடாம்பி ராமையங்கார் ஸ்வாமி சின்ன ஜீயர் ஆஸ்தானத்திலமர்ந்து தேவஸ்தானச் சிறப்புகளையெல்லாம் முறைப்படி பெற்றுக் கைங்கர்ய ஸாம்ராஜ்யாபிஷிக்தராய் விளங்கி வருகின்றார்.

---

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

சார்வரி நாமஸம்வத்ஸரம் சித்திரைத்திங்களில் ஸ்ரீ பெரும்பூதூரெம்பெருமானார் மஹோத்ஸவத்தில்
(24—4—60 to 28—4—60) நடைபெற்ற

**விசிஷ்டாத்வைத வித்வத்பரிஷத்தின் நீடூழி நினைவுமலராக**

**ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய**

# விசிஷ்டாத்வைத ஸர்வஸ்வம்.

ஶ்லோ ॥ யதீந்த்ர தத்த்வஜ்ஞயோ: வாதாபாதி விஜிஜ்ஞயா ।

விஶிஷ்டாத்வைதஸர்வஸ்வம் விவ்ருணோமி ஸதாம் முதே ॥

## (அவதாரிகை.)

1. உலகில் பிரசாரத்திலிருந்து வரும் பலவகைப்பட்ட மதங்களுள் பரமபவித்திரமான விசிஷ்டாத்வைததர்சநம் மிகச் சிறந்து விளங்குகின்றது. ப்ரமாணம், ப்ரமாதா, ப்ரமேயம் என்ற மூன்று வகுப்புகளும் நம் தர்சனத்தில் சீர்மை பெற்று விளங்குவன. (1) திருவாய்மொழியின் உபக்ரமத்தில் * சுடர்மிகு சுருதியென்று ஆழ்வாரால் கொண்டாடப்பட்ட வேதமே நமக்கு ப்ரமாணங்களில் தலையானது. (2) யதார்த்த ஜ்ஞான நிதிகளான ஸ்ரீமந் நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் போல்வாரான மஹாசார்யர்களே ப்ரமாதாக்களில் தலைசிறந்து விளங்குபவர். (3) ஸகல சேதநாசேதநசரீரகனாய் ஸமஸ்தகல்யாண குணாத்மகனான ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவமென்றும், அவனுடைய திருவடித் தாமரைகளில் பண்ணும் ப்ரபத்தியே பரமஹிதமென்றும், * நலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யாநந்தமயமான நித்ய கைங்கர்யமே பரமபுருஷார்த்தமென்றும் இங்ஙனே கூறப்படும் அர்த்த விசேஷங்களே ப்ரமேய ச்ரேஷ்டங்களாக விளங்குகின்றன. ஆக இத்தகைய ப்ரமாண ப்ரமாத்ரு ப்ரமேய வைசிஷ்ட்யமே நம்முடைய தர்சனத்தின் சிறப்புக்கு ஹேதுவாகாநின்றது. இதிஹாஸ புராணாதிகளான உபப்ரும்ஹணங்களோடும் ஆழ்வாருளிச் செயல்களோடும் கூடின வேதம் நமக்குப் பரம ப்ரமாணம். பரமவைதிகர்களென்கிற ஏற்றம் நமக்கே உரியது. உபயவேதாந்தப்ரவர்த்தகத்வமும் நமக்கே அஸாதாரணம்.

ப்ரத்யக்ஷத்தாலோ அநுமானத்தாலோ அறிந்துகொள்ள முடியாத அர்த்த விசேஷங்களை யறிவிக்கும் வாங்மயமே வேதமெனப்படும். * ப்ரத்யக்ஷேணாநுமித்யா வா யஸ் தூபாயோ ந புத்யதே. யத் தம் விதந்தி வேதேந தஸ்மாத் வேதஸ்ய வேததா. * என்கிற ப்ரமாணம் இங்கே அநுஸந்தேயம். வேதத்தை ப்ரமாணமாக இசையாத சார்வாக ஜைந பௌத்தாதிகள் பாஹ்யர்களெனப்படுவர். வேதத்தைப் பரம ப்ரமாணமாக இசைந்து வைத்தும், பரப்ரஹ்மம் குணசூந்யமென்றும் அலக்ஷ்மீகமென்றும் அசரீரமென்றும் விபூதி விரஹிதமென்றும் இங்ஙனே மனம் போனபடியெல்லாம் பேசுபவர்கள் குத்ருஷ்டிகளெனப்படுவர். பாஹ்யர்களோடு குத்ருஷ்டிகளோடு ஒருவாசியில்லையென்றருளிச் செய்கிறார் கூரத்தாழ்வான். ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் * பாஹ்யா: குத்ருஷ்டய இதி த்விதயேப்யபாரம்

கோரம் தமஸ் ஸமுபயாந்தி க ஹீக்ஷஸோ தாம். ஜக்தஸ்ய காககம்ருகைர் ம்ருகத்ருஷ்ணி கேப்ஸோ: காஸார ஸத்வநிஹதஸ்ய ச கோ விசேஷ: ?* என்றுள்ள ச்லோகம் இங்கே அநுஸந்தேயம். பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் துல்யயோக க்ஷேமர்களென்பதற்கு ஒரு அற்புதமான த்ருஷ்டாந்தம் காட்டுகிறாரிதில்; விடாய்மிகுத்துத் தண்ணீரைத் தேடியோட இரண்டு மிருகங்கள் புறப்பட்டன. அவற்றில் ஒரு மிருகமானது தடாகத்தில் புகாதே கானலைக்கண்டு பாநீயப்ரவாஹமாக மயங்கி ஓடிக்கொண்டேயிருக்கையில் புலியின் வாயிலே விழுந்து மாண்டொழிந்தது. இது இப்படியாக, மற்றொரு மிருகமானது விடாய்தீரப் பெறுவதற்கு உண்மையாகத் தண்ணீருள்ள தடாகத்திலேயே சென்று சேர்ந்தும் துறை தப்பியிழியவே அங்குக் கிடந்த தொரு முதலையினாலே கதுவப்பட்டு மாண்டொழிந்தது.

ஆக இரண்டு மிருகங்களும் தடாக ப்ரவேஶ அப்ரவேஶங்களாலே சிறிது வைலக்ஷண்யம் பெற்றிருந்தாலும் விநாசத்தில் துல்யபலமே. அதுபோலவே குத்ருஷ்டிகளும் பாஹ்யர்களும் வேதப்ராமாண்ய அங்கீகார அநங்கீகாரங்களாலே சிறிது வாசிபெற்றிருந்தாலும் விநாசத்திலே வாசியற்றவர்களே யென்றதாயிற்று. அந்த பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் கிடக்கட்டும். வேதக் கடலில் நாம் உள்ளபடி அவகாஹித்து அர்த்த ரத்னங்களைக் கொள்ளை கொண்டு அநுபவித்து ஆனந்திக்கக் கடவோம். (அவதாரிகை முற்றிற்று.)

## — வேதத்தில் காண்டமிரண்டென்கை —

2. வேதம் கர்மகாண்ட மென்றும் ப்ரஹ்மகாண்ட மென்றும் இரு வகுப்பாக வுள்ளது. பூர்வபாகம் கர்மகாண்ட மென்றும், உத்தரபாகம் ப்ரஹ்மகாண்டமென்றும் வழங்கப்படும். உபநிஷத்துக்களையே ப்ரஹ்மகாண்ட மென்பது. பகவானுக்கு ஆராதன ரூபங்களான யஜ்ஞம் முதலிய கரும விசேஷங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் கர்ம காண்ட மென்றும், அக்கருமங்களினால் ஆராதிக்கப்படுகின்ற பகவானுடைய ஸ்வரூப ரூப குணங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் ப்ரஹ்மகாண்ட மென்றும் சொல்லிற்றாயிற்று. இதுவே உபநிஷத்தென்கிற பெயராலும் வழங்கும். 'உப-நிஷீததி.' என்கிற வ்யுத்பத்தி கொண்டது உபநிஷத்தென்கிற பதம். பகவானுடைய அருகே யுள்ளவதென்கை. * வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய: * என்கிற கீதையின்படி கர்மகாண்டமுங்கூட பகவானை ப்ரதிபாதிக்கவல்லதேயாயினும் அந்த ப்ரதிபாதனம் வ்யவஹிதமாயிருக்கும். உபநிஷத்து அவ்யவதாநேந ப்ரதிபாதகமாயிருக்கும்.

## — உபயமீமாம்ஸைகள் அவதரித்தமை கூறுதல் —

3. கர்மகாண்டத்தில் தோன்றும் ஶங்கைகளைப் பரிஹரிப்பதற்காக ஜைமினியென்னும் மஹர்ஷியெழுந்து பதினாறு அத்யாயங்களோடு கூடிய ஒரு சாஸ்த்ரத்தை யியற்றினர். அதற்குப் பூர்வமீமாம்ஸையென்ற பெயர். இதில் பன்னிரண்டு அத்யாயங்களே ஜைமினி யால் இயற்றப்பட்டவை யென்றும், மேல் நான்கு அத்யாயங்கள் காஶக்ருத்ஸ்ந மஹர்ஷியால் இயற்றப்பட்டவை யென்றும ஒரு பக்ஷமுண்டு. இதைப்பற்றி இங்கு விசாரவிரிவு வேண்டா. * வ்ருத்திக்ரந்தே து ஜைமிந்யுபரசிததயா ஷோடஶாத்யாய்யுபாத்தா * இத்யாதியான அதி கரண ஸாராவளிச்லோகம்காண்க. "ஜைமினீயம் ஷோடஶலக்ஷணம்" என்பது பொதுவான வார்த்தை. போதாயந வ்ருத்திக்ரந்தத்தில் பதினாறு அத்யாயங்களும் ஜைமினிப்ரோக்த மென்று கூறப்பட்டுள்ளது. (லக்ஷணமென்று அத்யாயத்திற்குப் பெயர்.) ப்ரஹ்மகாண்ட

மென்னும் உபநிஷத் பாகத்தில் தோன்றும் ஶங்கைகளைப் பரிஹரிப்பதற்காக வ்யாஸ மஹர்ஷி யெழுந்து நான்கு அத்யாயங்கள் கொண்ட வொரு ஶாஸ்த்ரத்தை இயற்றினர். அதற்கே ஶாரீரகமீமாம்ஸை யென்று பெயர். உத்தரமீமாம்ஸை யென்றும் வழங்குவர். ப்ரஹ்ம ஸூத்ரமென்பது இதனையே. ஒவ்வோரத்யாயத்திலும் நான்கு பாதங்களுள்ளன. ஆகவே பதினறு பாதங்கள் கொண்டது ஶாரீரகமீமாம்ஸை யென்றதாயிற்று. இதில் ஒவ்வொரு விஷயத்தைப் பற்றி சர்ச்சை செய்து நிர்ணயிக்கும் பகுதிக்கு அதிகரணமென்று பெயரிடப் பட்டுள்ளது. அப்படிப்பட்ட அதிகரணங்கள் இந்த மீமாம்ஸையில் (156) நூற்றைம்பத்தாறு உள்ளன. சில அதிகரணங்களில் ஒரே ஸூத்ரமிருக்கும். பல அதிகரணங்களில் பல ஸூத்ரங்களிருக்கும். மொத்தம் ஸூத்ரங்களின் லக்கம் (545) ஐந்நூற்றுநாற்பத்தைந்து என்று கணக்கிடப்பட்டிருக்கின்றது. ஆக, நான்கு அத்யாயங்களையும், பதினறுபாதங் களையும் நூற்றைம்பத்தாறு அதிகரணங்களையும் ஐந்நூற்று நாற்பத்தைந்து ஸூத்ரங்களையுங் கொண்டது ப்ரஹ்மஸூத்ர ஶாஸ்த்ரமென்றதாயிற்று.

### — சாரீரகமீமாம்ஸா பாஷ்யங்கள் தோன்றியதைப்பற்றிக் கூறல் —

4. தத்வஹித புருஷார்த்தங்களை நாம் தெரிந்துகொள்வதற்கு உபநிஷத்துக்களே தஞ்சமாகும். அவ்வுபநிஷத்துக்களின் பொருள்களை ஸம்ஶய விபர்யமற நிஷ்கர்ஷித்து விளக்கக்கூடியது இந்த ப்ரஹ்மஸூத்ர ஶாஸ்த்ரமேயாதலால் வேதாந்திகளுக்கு இதுவே புகலாயிற்று. இந்த ஶாஸ்த்ரத்தின் பொருளை நிஷ்கர்ஷமாகவும் நிஷ்கல்மஷமாகவும் தெரிந்துகொண்டவர்களே வேதாந்திகளென்றும் ப்ரஹ்மஜ்ஞானிகளென்றும் சொல்லத் தகுதியுடையார். மஹர்ஷிகளியற்றிய ஸூத்ரங்களின் பொருளை நம்போல்வார் சிறிதும் அறியகில்லார்களாதலால், நம்போன்ற அல்பமதிகளிடத்தில் பரமகருணைகொண்ட பூருவர் கள் அந்த ஸூத்ரங்களின் அர்த்தத்தை விளக்கி பாஷ்யங்கள் இயற்றியுள்ளார்கள். த்வைதம் அத்வைதம் விஶிஷ்டாத்வைதம் என மூன்று மதங்கள் உலக ப்ரஸித்தமாக வழங்கு மவை. இம் மூன்று மதங்களிலும் பாஷ்யங்கள் அவதரித்துள்ளன. அத்வைத மதத்திற்காக ஶங்கராசாரிய ஸ்வாமிகள் பாஷ்யமியற்றினர். த்வைத மதத்திற்காக ஆனந்த தீர்த்த ஸ்வாமிகள் (மத்வாசார்) பாஷ்யமியற்றினர். நமது விசிஷ்டாத்வைத மதத்திற்காக பகவத் ராமாநுஜாசார்யரென்கிற ஸ்வாமி யெம்பெருமானர் ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்தார். வட இந்தியாவில் அதிக ப்ரஸித்திபெற்றுள்ள வல்லப மதம் நிம்பார்க்க மதம் முதலிய மதங்களுக் காகவும் பாஷ்யங்கள் தோன்றியுள்ளன. சைவ மதத்திற்காக நீலகண்ட பாஷ்யம் தோன்றி யுள்ளது. இப்படி மற்றும் பல பாஷ்யங்களிருந்தாலும் மதத்ரயபாஷ்ய மென்று மூன்று பாஷ்யங்களே நமது நாட்டில் குலாவப்படுகின்றன. ஸ்ரீவைஷ்ணவர்களென்றும் விசிஷ்டாத் வைதிகளென்றும் பகவத்ராமாநுஜ தர்சநஸ்தர்களென்றும் வழங்கப்படுகின்ற நமக்கு ஸ்வாமி யின் ஸ்ரீபாஷ்யமே ஜீவாதுவாகும். ஶங்கரபாஷ்யம் மத்வபாஷ்யம் நீலகண்டபாஷ்யம் என்பவைபோலல்லாமல் ஸ்ரீபாஷ்யமென்றே தோன்றியுள்ள ப்ரஸித்தி ஸ்ரீராமாநுஜபாஷ்யத்தின் ஒப்பற்ற பெருமையைப் புலப்படுத்தும்.

### — ஸ்ரீபாஷ்யத்தின் பெருமை விளக்கம் —

5. உபநிஷத்துக்களின் உண்மைப் பொருளை விளக்கி ஸூத்ரகாரருடைய உள்ளத் திற்கு ஒத்ததாக நிஷ்பக்ஷபாதமாய் நிருமிக்கப்பட்டது ஸ்ரீபாஷ்யமேயென்று மேனாட்டுப்

புலவர்களும் மெச்சியுள்ளார்கள். அதுநிற்க: ஸ்வாமி ஸ்ரீபாஷ்யமருளிச் செய்யத் தொடங்கும் போதே "பகவத்போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு:; தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே" என்று [முன்னோர் மொழிந்த முறை தப்பாமே வியாக்கியானிப்பதாக] அருளிச் செய்திருப்பதனால் ஸ்ரீ பாஷ்யத்தின் ப்ராமாணிகத்வம் அசைக்கமுடியாது விளங்குகின்றது. இக்காலத்து அஸூயுக்கள் சிலர் மேலே உதாஹரித்த பங்க்தியின் மேல் வீணான விவாதத்தைக் கிளப்பி ஸம்ரமடைந்துபோனார்களென்பது நம்முடைய ஶ்ருதப்ரகாஶிகா — தத்விஜயத்வஜ — ஶாங்கரஶிரோபூஷா — தத்விபூஷணாதிக்ரந்தங்களினால் விஶதமாதலால் அதனை ஈண்டு விவரித்துரைக்கின்றிலோம். ஆர்ஷவ்யாக்க்யாந கவசிதமாயும் அதிப்ராசீநமாயும் பரம பவித்திரமாயுமுள்ளது விஶிஷ்டாத்வைதமேயென்றும், அதை நிலைநாட்டவல்ல பாஷ்யம் ஸ்ரீபாஷ்யமேயென்றும் ப்ராமாணிக வைதிகோத்தமர்களின் கொள்கை.

## விசிஷ்டாத்வைத சப்தார்த்த விவரணம்

6. விஶிஷ்டாத்வைத ஸித்தாந்த மென்னுஞ் சொல்லுக்குப் பொருள் விவரிக்கப்படுகிறது. ஸித்தாந்த மென்பதற்கு ப்ராமாணிகமாகப் பரிக்ரஹிக்கப்பட்ட அர்த்தமென்று தேர்ந்த பொருள். மதம் என்றவாறு. இரண்டாயிருக்கும் தன்மை (த்விதா) எனப்படும். த்வைத மென்றாலும் அதுவே பொருள். பேதம் என்றதாயிற்று. அத்தோடு (நஞ்)சேர்ந்தால் அத்வைதம் என்றாகிறது. அபேதமென்று பொருள். விஶிஷ்டஸ்ய அத்வைதம் — விசிஷ்டாத்வைதம், ஸமஸ்தசேதநாசேதந வஸ்துக்களோடு கூடின ப்ரஹ்மம் ஒன்று என்று அங்கீகரிக்கப்படுவதால் இந்த தரிசனம் விஶிஷ்டாத்வைதமெனப்படுகிறது. சித்தும் அசித்துமாகிய இரண்டு தத்துவங்கள் உண்மையில் கிடையவே கிடையாதென்றும் ப்ரஹ்மமொன்றே உள்ளதென்றும் கொள்ளுகின்ற பிறருடைய மதத்தைத் தள்ளி, மூன்று தத்துவங்களும் உண்மையாகவுள்ளனவென்று கொள்ளுவதே இந்த தரிசனத்தில் ஸாமானது. "ஸ்வவிஶேஷணவிஶிஷ்டப்ரகாரம் ப்ரஹ்மைகமேவ தத்வம்; உபயோரேவ த்ருஷ்டஶ்ருதம் ஸாமாந்யத: ப்ரமாணவிஷயதயா விஶேஷத: ப்ரகரணேந ப்ரதிபாதிதத்வாத். தத்ர ப்ரகாரப்ரகாரிணோ: ப்ரகாராணாஞ்ச மித: ஸ்வரூபபேதேऽபி விஶிஷ்டைக்யாதிவிவக்ஷயா ஏகத்வவ்யபதேஶ:," என்கிற ந்யாயஸித்தாஞ்ஜந ஸ்ரீ ஸூக்திகள் இங்கு அநுஸந்தேயம்.

— விசிஷ்டாத்வைதமென்பதற்கு வேறு பொருளின் பொருந்தாமை. —

7. 'விசிஷ்டஸ்ய அத்வைதம் — விசிஷ்டாத்வைதம்' என்று கொள்ளுகையன்றிக்கே, 'விசிஷ்டம் ச விசிஷ்டம் ச விசிஷ்டே; விசிஷ்டயோ: அத்வைதம் - விசிஷ்டாத்வைதம்' என்று கொண்டு ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்ட ப்ரஹ்மத்திற்கும் ஸ்தூல சிதசித்விசிஷ்டப்ரஹ்மத்திற்கும் ஐக்கியம் கொள்ளுகை விசிஷ்டாத்வைதம் — என்பாருமுளர். இதில் உபபத்தி காண்பதரிது. விசிஷ்டஸ்ய அத்வைதமென்பதே உபபந்நமாகும். 'ப்ரஹ்மமொன்றே ஸத்யமானது; மற்றவையெல்லாம் மித்யை' என்று சொல்லுகிற அத்வைதிகள் ப்ரஹ்மத்தினிடத்தில் சிதசித்விசிஷ்டத்வத்தை ஒப்புக்கொள்ளுவதில்லை. ப்ரஹ்மம் போலவே ஜகத்தும் ஸத்யமேயென்று அங்கீகரிக்கிற த்வைதிகளும் [மாத்வர்களும்] சேதநாசேதநங்களுக்கும் ப்ரஹ்மத்திற்கும் ரக்ஷ்யரக்ஷகபாவ ரூபமான ஸம்பந்தம் தவிர ஐக்யவ்யபதேஶத்திற்குரிய ஸம்பந்த விஶேஷமொன்றும் அங்கீகரிக்கின்றிலர். ஆகவே அவர்களும் ப்ரஹ்மத்தினிடத்தில் சிதசித் வைசிஷ்ட்யத்தை ஏற்றுக்கொள்வதில்லையென்பது தேறிற்று. நமது ஸித்தாந்தத்திலோ

வென்னில், சேதநாசேதநாத்மகமான ப்ரபஞ்சத்தையும் ப்ரஹ்மத்தையும் ஸத்ய மென்று கொள்வதோடு அவற்றுக்கு ஐக்யவ்யபதேஶத்தை நிர்வஹிக்கக் கூடியதான ஶரீர ஶரீரிபாவ ரூபமான ஸம்பந்த விஶேஷத்தையும் கொள்வதனால், உலகத்தில் உடலுக்கும் உயிருக்கும் வேற்றுமை அபலபிக்கமுடியாததாயிருக்கச் செய்தேயும் "சைத்ர ஏக:" என்கிற வியவஹாரம் எப்படி காணப்படுகிறதோ அப்படியே இங்கும் சேதநாசேதந சரீரகமான ப்ரஹ்மத்திற்கு ஏகத்வேந வ்யபதேஶமும் பரஸ்பரம் ஸ்வரூபபேதமும் பொருந்தக் குறையில்லை. இவ்வர்த்தத் தத்த்வத்தைக் காட்டவல்லதான 'விசிஷ்டஸ்ய அத்வைதம்—விசிஷ்டாத்வைதம் என்னும் வ்யுத்பத்தியே யுக்தமானதென்று கொள்க.

## — த்வைதத்தையும் அத்வைதத்தையும் பற்றின நிரூபணங்கள். —

8. ச்ருதிவாக்யங்களை உற்று நோக்கினால் அவற்றுள் இருவகையான பாகுபாடு காணப்படும். (1) பேதத்தையே காட்டும் சில வாக்யங்கள். (2) அபேதத்தையே காட்டும் சில வாக்யங்கள். * க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீஶதே தேவ ஏக:* * ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஶநீஶௌ * இத்யாதி ச்ருதி வாக்யங்கள் சேதந — அசேதந — ஈச்வரரூப தத்வத்ரயத்தின் உண்மையைத் தெரிவிக்கும் முகத்தால் பேதத்தைக் காட்டுகின்றன. * நேஹ நாநாஸ்தி கிஞ்சந * * ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம * தத் த்வமஸி * இத்யாதிகளான ச்ருதிவாக்யங்கள் பலவகைப்பட்ட வஸ்துக்களில்லாமையைத் தெரிவிக்கும் முகத்தால் அபேதத்தைக் காட்டுகின்றன. ஆக, ச்ருதிகளில் சிலவிடத்து பேதப்ரதிபாதநமும் சிலவிடத்து அபேதப்ரதிபாதநமுமிருப்பதாகத் தேறுகையாலே பரஸ்பர விரோதம் ஸ்பஷ்டமாகிறது. விருத்தமான அர்த்தத்தைத் தெரிவிக்கையாகிற அவத்யம் ச்ருதிகளில் இடம் பெறத்தகாது. விரோதமோ உள்ளதென்று காட்டியாயிற்று. விரோதத்தைப் போக்கி ஸமந்வயம் காட்ட வேண்டிய பொறுப்பு விமர்ஶகுஶலர்களான வைதிகர்களுக்குள்ளது. ப்ரஹ்மமொன்றுதான் ஸத்யமென்று கொள்ளுகிற அத்வைதிகள் அபேதத்தைக் காட்டும் ச்ருதி வாக்யங்களை மட்டும் முக்கியமாகப் பரிக்ரஹித்து பேதத்தைக் காட்டும் ச்ருதிவாக்யங்களை உபேக்ஷித்து விட்டார்கள். த்வைதிகளோவென்னில் பேதத்தைக் காட்டும் ச்ருதி வாக்யங்களை மட்டும் முக்கியமாகப் பரிக்ரஹித்து அபேதத்தைக் காட்டும் ச்ருதி வாக்யங்களை உபேக்ஷித்துவிட்டார்கள்.

9. * யஸ்யாத்மா ஶரீரம், யஸ்ய ப்ருதிவீ ஶரீரம். ய ஆத்மநி திஷ்டந் * இத்யாதி வாக்யங்கள் பகவான் ப்ருதிவிமுதல் ஆத்மாவரையிலுமுள்ள ஸகல வஸ்துக்களிலும் அந்தர்யாமியாயிருக்கிறானென்பதை ப்ரதிபாதிக்கின்றன; இவற்றை த்வைதிகளும் அத்வைதிகளுமான இரு வகுப்பினரும் அறவே விட்டிட்டார்கள். ஸுபாலோபநிஷத்து முதலான அந்தர்யாமி ப்ராஹ்மணவாக்யங்களுக்கு உபய மதத்திலும் ஆதரவு கிடையாதென்பது ஸ்பஷ்டம், ஆக, த்வைதாத்வைத மதங்களிரண்டிலும் அநேக ச்ருதிவாக்யங்களை அமுக்யார்த்தங்களாகக் கொள்ளுதல் உபேக்ஷித்தல் இத்யாதியான பலீயஸ்ஸான தோஷமுள்ளது. இத்தகைய தோஷம் சிறிதுமில்லாதது நமது மதமென்னுமிடம் அடுத்தபடியாக விவரிக்கப்படுகின்றது.

## — விசிஷ்டாத்வைத மத ப்ரக்ரியை —

10. கீழே யெடுத்துக்காட்டிய மூன்று வகுப்பான ச்ருதிவாக்யங்களையும் ஒரு நிகராக ஆதரிப்பவர்கள் விசிஷ்டாத்வைதிகளேயாவர். ஒருவகைச்ருதிவாக்கியத்திலும் அமுக்

க்யார்த்த கல்பனை யென்பது கிடையாது. எங்ஙனேயென்னில்; கடைசியாக எடுத்துக் காட்டப்பட்ட * யஸ்யாத்மா ஶரீரமித்யாதிகளான ச்ருதி வாக்யங்களுக்கு ஃகடக ச்ருதிக ளென்று பெயர். பேதத்தையும் அபேதத்தையும் விரோத லேஶமுமின்றிக்கே ஃடிப்பிக்க வல்லவை அந்தர்யாமி ப்ராஹ்மண வாக்யங்கள் என்கிற காரணத்தினால் இவற்றுக்கு ஃடகச்ருதிகளென்னும் பெயர் மிகப் பொருத்தமானது. * நேஹ நாநாஸ்தி கிஞ்சந * இத்யாதிகளான அத்வைத (அபேத) ச்ருதிகளினாலேற்பட்ட அபேதத்தையும் * க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர: * இத்யாதிகளான த்வைத (பேத) ச்ருதிகளினாலேற்பட்ட பேதத்தையும் பொருந்தவிடும் வழி கேண்மின்.

"[illegible]
[illegible]
[illegible]
[illegible]"

என்னுமிந்த ஸங்கல்பஸூர்யோதய ச்லோகத்தைச் சிந்தனை செய்வது. இந்தச் லோகத்தின் தாற்பரியமாவது, சேதநாசேதந ஈச்வரர்களான மூன்று தத்துவப் பொருள்களின் ஸ்வரூப பேதம் உண்மையாதலால் * க்ஷரம் ப்ரதாநமித்யாதி பேத ச்ருதியானது பேதத்தைச் சொல்லி யிருப்பது பாங்கே. ப்ரஹ்மம் சேதநா சேதந விஶிஷ்டமாய்க்கொண்டு ஒன்றேயாகிற படியால் * ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம * இத்யாதியான அபேத ச்ருதிகளும் பொருந்தக் குறையில்லை. * யஸ்யாத்மா ஶரீரமித்யாதி அந்தர்யாமி ப்ராஹ்மண ச்ருதிகளானவை ஸர்வேச்வரனை ஸர்வாந்தர்யாமி யென்று தெரிவிக்கும் முகத்தால் பேதத்தையும் அபேதத்தையும் பொருந்த விடுகின்றன, என்கை.

*தேஹோ தேஹிநி காரணே* ஸ்தித்யுத்பத்திப்ரவ்ருத்தி * இத்யாதிகளான ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரசதகத்தில் 23, 24-ஆம் சுலோகங்களும் இங்கு முக்கியமானவை. அடியேனுடைய ஸ்ரீரங்கராஜஸ்தவ (மணிப்ரவாள) வியாக்கியானத்தில் விபுலமாகவும் விஶதமாகவும் இவற்றின் ஶப்தார்த்தமும் தாத்பர்யார்த்தமும் காண்கவென்று எழுதவதற்கு மேற்பட இங்கு யாதொன்றும் விவரிக்ககில்லேன். சிதசிதீச்வரர்களாகிற மூன்று தத்துவங்களிலும் தனிப்படக் கண் செலுத்தினால் பேதம் க்ரஹிக்கப்படுகிறது. அசேதநமாகிய ஶரீரம் வேறு; அதனுள்ளுறையும் சேதநன் வேறு; அவனுக்கும் அந்தர்யாமியான பரமாத்மா வேறு என்ற பேதப்ரதிபத்தி ஶாஸ்த்ரஸம்மதமேயாகும். பல அவயவங்களின் கூட்டரவான சரீரத்திலே கை, கால், காது, மூக்கு முதலானவற்றைத் தனியே பார்க்குமிடத்து பேத ப்ரதிபத்தியும் 'அவயவஸங்காதம் ஒன்று' என்று பார்க்குமிடத்து அபேத ப்ரதிபத்தியும் பொருந்து கின்றது. தேவதத்தன் ஒருவன், யஜ்ஞதத்தன் ஒருவன் இத்யாதி வ்யவஹாரங்களில் தேவ தத்தனுக்கும் யஜ்ஞதத்தனுக்கும் ஒருமை எங்ஙனே? என்று விமர்சிக்கவேணும். தேவதத்த: க்ருஶ:, யஜ்ஞதத்த: ஸ்தூல:' இத்யாதிவ்யவஹாரங்களில் க்ருஶத்வமும் ஸ்தூலத்வமும் ஶரீர தர்மமாகையாலே தேவதத்த யஜ்ஞதத்த ஶப்தங்கள் ஶரீரபரங்களேயென்று அறுதியிடப் படுகிறது; 'தேவதத்தோ மேதாவீ, யஜ்ஞதத்த: ப்ரதிபாவாந்' இத்யாதிவ்யவஹாரங்களில் மேதையும் ப்ரதிபையும் ஆத்ம தர்மமாகையாலே அந்த தேவதத்த யஜ்ஞதத்த பதங்களே ஆத்ம பரங்களென்று நிர்ணயிக்கப்படுகிறது. ஆத்மாவும் ஶரீரமும் ஒன்றல்ல, வெவ்வேறு

பட்டவை. ஆக அநேக வஸ்துக்களிருக்கச் செய்தேயும் ஏகத்வவ்யவஹாரம் நிகழ்ந்து வருவது 'ஶரீர விசிஷ்டனுன ஶரீரி ஒருவன்' என்னுமபிஸந்தியாலத்தனையன்றே. இவ்வண்ணமாகவே 'ப்ரஹ்ம ஏகமேவ' என்ற ச்ருதியும் விஶிஷ்டைக்யத்தைச் சொல்லுவதாகக் கொள்ளக் குறையில்லையே. ஏவஞ்ச, பேதத்திற்கும் அபேதத்திற்கும் அபாயமொன்றுமில்லையென்றதாயிற்று. ஶரீரங்களும் ஶரீரிகளுமாகிற நாநாவஸ்துஸத்பாவம் ப்ராமாணிகமாகையாலே அபலபிக்க வொண்ணுததே. இங்ஙனே விஶிஷ்டைக்யமும் அநுபவஸித்தமாகையாலே அபலபிக்க வொண்ணுததே. ஆக; உண்மையில் வெவ்வேறுபட்ட வஸ்துக்களும் ஶரீர ஶரீரி ஸாவநிபந்தநமாகவே ஒன்ருக வழங்கப்படுவதாய் ஸித்திக்கையாலே அப்படிப்பட்ட ஶரீர ஶரீரி ஸாவத்தையுணர்த்துகின்ற அந்தர்யாமி ப்ராஹ்மணுதிரூபங்களான ச்ருதி வாக்யங்களுக்கு நமது மதத்தில் மிகுந்த கௌரவமுள்ளது. அத்வைதிகள் பேதச்ருதிகளை அநாதரிப்பது போலவும், த்வைதிகள் அபேதச்ருதிகளை அநாதரிப்பதுபோலவும் நாம் ஒருவகையான ச்ருதியிலும் அநாதரம் காட்டுகின்றிலோம். ஆகவே ஸர்வச்ருதிஸாமஞ்ஜஸ்யம் நமக்கே யொழியப் பிறர்க்கில்லை யென்பது கல்வெட்டாகத் தேறி நின்றது.

— சரீராத்ம பாவமே ப்ரதாநப்ரதிதந்த்ரார்த்த மென்பது —

11. மதாந்தரஸ்தர்கள் ஒப்புக்கொள்ளாத பல அர்த்தங்களை நாம் ஒப்புக்கொண்டிருக்கின்றேம்; நித்யஸூரிஸத்பாவம், எம்பெருமானுடைய கல்யாண குணுச்ரயத்வம், திவ்ய மங்கள விக்ரஹ விசிஷ்டத்வம் முதலானவை அவை. இவற்றை யெல்லாம் விட்டு சரீர சரீரி ஸாவத்தையே கொண்டு விசிஷ்டாத்வைதமென்று பெயரிடுவதில் என்ன விசேஷமென்னில், கேண்மின். ஸித்தாந்தத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்ற அர்த்த விசேஷங்களுள் ஜகச்சரீரகத்வ மென்பதே பிரதாநமானது. ஆனதுபற்றியே இது ப்ரதாந ப்ரதிதந்த்ரார்த்த மெனப்படுகிறது இதுவே ப்ரதாநமென்பது எங்ஙனமென்னில்; ஸர்வ ச்ருதிகளினுடையவும் முக்கியமான அர்த்தத்தைத் தெரிவிப்பதாய், ஸர்வச்ருதிகளுக்கும் ஸாமஞ்ஜஸ்யத்தை நிர்வஹித்து வாதிவிஜய ப்ரயோஜகமாயிருப்பதனுலே இதற்கு ப்ராதாந்ய மென்றுணர்க. இந்த ஶரீராத்ம பாவத்தைத் தெரிந்துகொள்ளாமையினுலன்றே பிறமதத்தவர்கள் ஸர்வ ச்ருதிஸாமஞ்ஜஸ்யத்தை நிர்வஹிக்கமாட்டாமல் தளருகின்றூர்கள். குத்ருஷ்டிகளின் குசோத்யங்களை அவலீலயா பரிஹரித்துத் தருவது இந்த ஶரீராத்மபாவமே யென்க. இங்கு

"[illegible]
[illegible]
[illegible]
[illegible]" ॥

இத்யாதியான வேதாந்தாசார்ய ச்லோகரத்நத்தைத் திடமாக்க் கொள்க. இந்த ப்ரதாந ப்ரதிதந்த்ரார்த்தத்தை நன்கு தெரிந்துகொண்ட வொரு வ்யக்தியிற்குமிடத்தில் விமதர்கள் எத்தனை பேர்கள் கூடி எவ்வளவு வாதகோலாஹலங்கள் செய்தாலும் அவர்களுக்கு ஸங்கமேதவிர வேறில்லையென்பது இதன் கருத்து.

—சரீராத்ம ஸாவம் ஶாரீரக மீமாம்ஸாநுக்ருஹீதமென்பதை விவரித்தல்—

12. ஸித்தாந்தத்தில் ஶரீராத்மஸாவமே பிரதான மென்பது கீழே உபபாதிக்கப்பட்டது. ப்ரஹ்மஸூத்ரகாரருக்கும் இதுவே அபிமதமென்பது இனி மூதலிக்கப்படுகிறது.

இவ்விஷயத்தில் ஶாரீரக மீமாம்ஸை முழுவதுமே ப்ரமாணமாகக் காட்டக் கூடியதாயினும் வ்யுத்பித்ஸுக்களின் புத்தியில் ஏறுவதற்காக ஸம்க்ஷேபமாய் நிரூபித்தல் நலமென்று கருதி, அந்த ஶாரீரக மீமாம்ஸையில் ஒரு அதிகரணத்தை மட்டும் ஈண்டெடுத்துக் காட்டி ப்ராமாணிகர்களின் மனத்தில் பதியவைக்கிறோம். அதில் முதலத்யாயம் நான்காவது பாதத்தில் வாக்யான்வயாதிகரணமென்பது ப்ரஸித்தமானது. நான்கு ஸூத்ரங்கள் கொண்டது இவ்வதிகரணம். ப்ருஹதாரண்யகத்தில் ப்ரஸித்தமான மைத்ரேயீ ப்ராஹ்மணமென்னும் பகுதியில் அம்ருதத்வோபாயமேதென்று கேட்ட மைத்ரேயியைக் குறித்து யாஜ்ஞவல்க்யருடைய விடை * 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌵𑌾 𑌅𑌰𑍇 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌃 * என்பது. இதில் ஆத்மா என்னும் ஶப்தத்தால் குறிக்கப்பட்டவன் பரமாத்மாவா? ஜீவாத்மாவா? என்று விசாரம் ப்ரஸக்தமாக, பரமாத்மாவேயென்று நிர்ணயம் செய்வது இவ்வதிகரணத்தின் ப்ரமேயம். இது * 𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌨𑍍𑌵𑌯𑌾𑌤𑍍 * என்கிற முதல் ஸூத்ரத்தினால் தேறியது. மைத்ரேயீப்ராஹ்மணத்திலுள்ள மஹாவாக்யம் ஸமஞ்ஜஸமாக அந்வயிக்க வேண்டுகையாலே அந்த வாக்யத்தில் ப்ரதிபாதிக்கப்பட்ட ஆத்மா கருமபலன்களை யநுபவிப்பவனான ஜீவாத்மாவாக இருக்க முடியாது; பரமபுருஷனேயாகவடுக்கும்—என்று சொல்லப்பட்டதாயிற்று. இதற்குமேல் ஒரு கேள்வி எழுந்தது; அதாவது, இங்குப் பரமாத்மா விவக்ஷிதனாகில் ஜீவாத்மவாசகமான ஆத்மா என்கிற ஶப்தத்தை ப்ரயோகிப்பானேன்? பரமாத்மாவென்றே ப்ரயோகிக்கலாகாதா? என்று. இக்கேள்விக்கு—ஸூத்ரகாரரால் மேலே மூன்று ஸூத்ரங்களினால் ஸமாதானம் தெரிவிக்கப்பட்டுள்ளது. அடைவே ஆச்மரத்யமதம், ஔடுலோமிமதம், காஶக்ருத்ஸ்நமதம் என மூவருடைய மதம் காட்டப்பட்டுள்ளது. முறையே ஸூத்ரங்கள் (1) 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌿𑌦𑍍𑌧𑍇𑌰𑍍𑌲𑌿𑌙𑍍𑌗𑌮𑌾𑌶𑍍𑌮𑌰𑌥𑍍𑌯𑌃. (2) 𑌉𑌤𑍍𑌕𑍍𑌰𑌮𑌿𑌷𑍍𑌯𑌤 𑌏𑌵𑌂𑌭𑌾𑌵𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑍌𑌡𑍁𑌲𑍋𑌮𑌿𑌃 (3) 𑌅𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍇𑌰𑌿𑌤𑌿 𑌕𑌾𑌶𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌃 என்பன.

(1) ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு கார்யகாரணபாவம் ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கையாலே அதனால் அவர்களுக்கு அபேதம் ஏற்படுகிறது. அதைத் தெரிவிப்பதற்காகப் பரமாத்ம ஜீவாத்மாக்களுக்கு ஐக்யோக்தியுள்ளதென்று ஆச்மரத்யமதம்.

(2) இனி ஔடுலோமி மதம்; கீழே காட்டிய ஆச்மரத்யமதத்தில் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவிடமிருந்து உத்பத்தியைக் கொள்ளுகையாலே * 𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌵𑌾 𑌵𑌿𑌪𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 * இத்யாதி ப்ரமாணங்களோடு அது விரோதிக்கையாலும் மற்றும் அநேக தோஷப்ரஸங்கத்தாலும் ஆச்மரத்யமதம் ஸாதுவன்றென்று கொண்ட ஔடுலோமியானவர்-முக்திதசையில் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவோடு அபேதம் ச்ருதி ஸித்தமாயிருக்கையாலே முக்திதசையில் பவிஷ்யத்தான ஜீவாத்ம பரமாத்ம அபேதத்தை யவலம்பித்து ஐக்யம் சொல்லிற்றாக நிர்வஹித்தார்.

(3) இனி காஶக்ருத்ஸ்நமதம். கீழே விவரித்த ஔடுலோமி மதத்தில் மோக்ஷம் வரை ஜீவாத்மபரமாத்மாக்களுக்கு பேதமுள்ளதென்றும் முக்திதசையில் அபேதமென்றும் கொள்ளப்படுகிறவிது, * 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌰𑍍𑌯𑍋𑌗𑌃 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥 𑌇𑌤𑍀𑌷𑍍𑌯𑌤𑍇 । 𑌮𑌿𑌥𑍍𑌯𑍈𑌤𑌦𑌨𑍍𑌯𑌦𑍍 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌂 𑌹𑌿 𑌨𑍈𑌤𑌿 𑌤𑌦𑍍𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌤𑌾𑌂 𑌯𑌤𑌃 ॥ * என்கிற ஸ்ரீ விஷ்ணுபுராண வசன விருத்தம். வெவ்வேறுபட்ட பொருள்கள் ஒன்றோடொன்று சேருமேயொழிய ஐக்கியத்தை யடையமாட்டாவென்று இதில் ஸ்பஷ்டமாகக் கூறியிருக்கின்றதன்றோ. முக்திதசையில் ஜீவாத்மாவுக்கு ஸ்வஸ்வாபாவிகஸ்வரூபாவிர்பாவமேயொழிய, பரமாத்மாவோடு ஐக்யாபத்தியென்பதில்லை என்னுமிடம் (4-4-1.) * 𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌰𑍍𑌭𑌾-

வாதிகரணத்தில் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. ஆக இத்தனைக்கும் மூலமாக நிர்வஹிப்பது அநுசிதம் என்று கொண்ட காஶக்ருத்ஸ்நர் பரமாத்மா ஜீவாத்மாவினுள் அந்தராத்மாவாக இருப்பதும், ஜீவாத்மாவுக்குப் பரமாத்ம ஶரீரத்வமும் * யஆத்மநி திஷ்டந்............ யஸ்யாத்மா ஶரீரம் * இத்யாதி ச்ருதி ஸித்தமாகையாலும், ஶரீர வாசகங்களான ஶப்தங்களுக்கு ஶரீரிவாசகத்வம் ஸாகாச்த்ராதிகரண ஸித்தமாகையாலும் ஸூத்ரத்தில் ஜீவாத்மவாசியான ஆத்மஶப்தத்தை பரமாத்ம பர்யந்த வாசகமாக நிர்வஹிப்பதுதான் உசிதமென்று கருதினர்.

இங்ஙனே வரிசையாக மூன்று மதங்களை உதாஹரித்த ஸூத்ரகாரர் பேலே நான்காவது மதத்தைச் சொல்லாமையினால் காஶக்ருத்ஸ்நமதமே ஸூத்ரகாராபிமத மென்பது நிஸ்ஸந்தேஹமாக நிர்ணயிக்கப்படுகிறது. இது விசிஷ்டாத்வைத மதத்திற்கு விஜயத்வஜமானது.

## — காஶக்ருத்ஸ்ந மதத்தை நன்கு உபபாதித்தல் —

14. இங்கே அத்வைதிகள் சொல்லுவதென்னவென்றால் காஶக்ருத்ஸ்ந மதந்தான் ஸூத்ரகாராபிமத மென்பதில் எமக்கும் விப்ரதிபத்தி கிடையாது. இதை நாங்களும் இசைந்தேயிருக்கிறோம். ஆனால் (அவஸ்திதே:) என்பதற்கு 'பரமாத்மாவானவர் ஜீவாத்மாவினிடத்தில் அந்தர்யாமியாயிருப்பதனாலே' என்று நீங்கள் கூறுகின்ற பொருள் ஸாதுவன்று. 'பரமாத்மாதானே ஜீவாத்மாவாக இருப்பதனாலே' என்கிற பொருள்தான் (அவஸ்திதே:) என்பதற்கு ஸமஞ்ஜஸமாகும். ஸூத்ரத்தில் ஐக்யத்தைப் பொருந்தவிடவேணும்; இங்ஙனே பொருள் கூறினாலும் ஐக்யம் பொருந்திவிடுகின்றதன்றோ. காஶக்ருத்ஸ்நர் ஶரீராத்ம பாவத்தை யவலம்பித்தே ஐக்யத்தைப் பொருந்தவிட்டாரென்று எதுக்கு ஒப்புக் கொள்ளவேண்டும்? என்கிறார்கள் அத்வைதிகள். இது ஸமஞ்ஜஸமான வாதமன்று என்பதை நன்கு நிரூபிக்கிறோம்.

முதலத்யாயம் இரண்டாம் பாதத்தில், * அத்தா சராசரக்ரஹணாத் * என்னும் உபக்ரம ஸூத்ரத்தைக் கொண்ட அத்ரதிகரணத்தில் * குஹாம் ப்ரவிஷ்டாவாத்மாநௌ ஹி தத்தர்ஶநாத் * என்கிற ஸூத்ரத்தில் அநுவதிதாத்ம த்வவாசியாய் த்விவசநாந்தமான (ஆத்மாநௌ) என்கிற ஶப்தத்தினால் ஸஹாவஸ்திதசேதநவிசேஷங்களான ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு ஹ்ருதயகுஹாப்ரவேசம் ச்ருதிஸித்தமென்று தெரிவிக்கப்பட்டுள்ளது. இதனால் ஜீவப்ரஹ்மங்களுக்கு நிருபாதிகமான பேதமே ச்ருதிக்கு அபிமதமென்று ஸூத்ரகாரர் அபிப்ராயப்பட்டிருப்பது ஸ்பஷ்டமாகத் தெரிய வருகிறது. ஆக ஜீவப்ரஹ்மங்களுக்கு ஸ்வாபாவிகமான ஸ்வரூப பேதத்திற்கு விரோதமில்லாமல் நிர்வஹிப்பதுதான் ஸூத்ரகாராபிமதமென்று இசைந்து தீரவேணும். ஏவஞ்ச, ஜீவப்ரஹ்மங்களுக்கு ஸ்வரூபைக்யத்தை யவலம்பித்து நிர்வஹிக்கவந்தது அவஸ்திதேரித்யாதி ஸூத்ரமென்று சொல்லுவது பொருந்த மாட்டாது. இங்கு நாம் முக்கியமாகச் சொல்வதை கவனிக்கவேண்டும். அவஸ்திதி: என்கிற ஶப்தமானது 'ஹுதமே வட: அவதிஷ்டதே; ப்ராஸாதே தேவதத்த: அவதிஷ்டதே' இத்யாதி வ்யவஹாரங்களிற்போல ஒரு வஸ்துவில் மற்றொரு வஸ்து இருப்பதைத்தான் சொல்லக் கடவது. * ப்ருதிவ்யாம் திஷ்டந், அப்ஸு திஷ்டந், தேஜஸி திஷ்டந், வாயௌ திஷ்டந், ஆகாஶே திஷ்டந், ஆத்மநி திஷ்டந், * இத்யாதிகளான உபநிஷத் வாக்யங்களில் பலகால்

காணப்படுகிற ஶாயாத் ப்ரயோகத்தையடியொற்றியே (அவஸ்திதே:) என்கிற ஸௌத்ர ப்ரயோகமுள்ளதென்பதை ப்ராமாணிகர்களின் உள்ளம் க்ரஹிக்கமாட்டாததன்று. அநாயாஸமாக க்ரஹிக்கும். ஆக, அவஸ்திதே: என்னும் பதத்திற்கு அத்வைதிகள் கூறும் பொருள் கேவலம் அபிநிவேஶமாத்ர விஜ்ரும்பிதமென்று கொள்க. ஏவஞ்ச, வாக்யாந்வயாதிகரணத்தில் விசிஷ்டாத்வைதமே ஸித்தாந்தீகரிக்கப்பட்டதென்பது தெளிவாயிற்று.

## — இங்கு விசேஷ அறிவிப்பு —

15. ஸ்ரீ பாஷ்யம் வேதார்த்த ஸங்க்ரஹம் முதலான உத்துங்க க்ரந்தங்களில் ஆழ்ந்த அவகாஹநமுள்ளவர்களுக்கு நமது இச்சிறு நூலால் விசேஷமான பயனொன்றும் நேராது. அத்தகைய ப்ரௌட வித்வான்கள் இச்சிறு நூலை வாசிக்கவும் ப்ரஸக்தியிராது. வ்யுத்பித்ஸுக்களாய் ஸித்தாந்த தத்வத்தையறிந்து கொள்ள விருப்பமுள்ளவர்களுக்கு இந் நூல் மிகவும் பயன்படவேணுமென்பது நமது விருப்பம். ஸூத்ரகாரரான வியாஸ மஹர்ஷியின் அந்தரங்கம் எந்த வழியில் ஸ்வரஸமாகச் செல்லுகின்றதென்பதை தடஸ்தபுத்திகளாயிருக்குமவர்கள் தெரிந்துகொள்ளவேண்டுவது அவசியம். அன்னவர்களது த்ருப்திக்காக சாரீரக மீமாம்ஸையிலிருந்து சில அதிகரணங்களின் நிஷ்கர்ஷங்களை எளிதான வழியில் எடுத்துக் காட்டுவோமாக. நாலாமத்யாயம் நாலாம் பாதத்தில் * ஸம்பத்யாவிர்பாவாதிகரணம்; அடுத்தபடியாக அவிபாகேந த்ருஷ்டத்வாதிகரணம்; மூன்றுமத்யாயம் இரண்டாம் பாதத்தில் ஸந்த்யாதிகரணத்தில் * பராபித்யாநாத்து திரோஹிதம் ததோ ஹ்யஸ்ய பந்தவிபர்யயௌ * என்கிற ஸூத்ரம்; இரண்டாமத்யாயம் முதற்பாதத்தில் இதரவ்யபதேஶாதிகரணத்தில் * அதிகம் து பேதநிர்தேஶாத் * அஶ்மாதிவச்ச தத³நுபபத்தி: * என்னுமிரண்டு ஸூத்ரங்கள். ஆக இவற்றின் ப்ரமேயங்களை இங்கு முக்கியமாக நிரூபிக்கிறோம். இவற்றின் பொருள்களை அவரவர்கள் முன்னடியே வேதாந்ததீப, வேதாந்தஸாரங்களின் உதவியினால் உணர்ந்து கொள்வது நலம்.

## — மோக்ஷஸ்வரூபத்தை விசாரிக்கத் தொடங்குதல் —

16. ஜீவாத்மாக்கள் முக்திதசையில் தனியேயிருந்துகொண்டு பரப்ரஹ்மத்தை அநுபவிப்பதாக ஸித்தாந்தமா? அல்லது ஜீவாத்மாக்களுக்கு ப்ரஹ்மத்தோடு ஐக்யாபத்திதான் மோக்ஷமென்று ஸித்தாந்தமா? ஸூத்ரகாரருடைய ஸித்தாந்தம் எத்தகைத்து? என்கிற விது முக்கியமாக விமர்சிக்கத் தக்கது. * ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி * என்கிற முண்டகோபநிஷத்வாக்யத்தை முன் பின் ஸந்தர்ப்பத்தைச் சிறிதும் விமர்சியாமல் வெறும் ஆக்ரஹத்தோடு பற்றிக்கொண்டு 'ப்ரஹ்மத்தோடு ஐக்யமடைவதிற்காட்டிலும் வேறொன்றுமில்லை' என்று கூறுகின்ற அத்வைதிகளுக்கு * ஸம்பத்யாவிர்பாவாதிகரணம் மிகவும் விரோதியென்பதை உணரவேணும். அதனைச் சிறிது உபபாதிக்கிறோம்;

## — ஸம்பத்யாவிர்ப்பாவாதிகரண ப்ரமேய நிரூபணம் —

17. * ஸம்பத்யாவிர்பாவ: ஸ்வேநஶப்தாத் * (4—4—1.) என்கிற ஸூத்ரத்தினால்—அர்சிராதிமார்க்கத்தாலே ப்ரக்ருதிமண்டலத்திற்கப்பால் அப்ராக்ருத தேஶவிஶேஷத்தில் ஆதித்யவர்ண திவ்யமங்கள விக்ரஹ விஶேஷ விஶிஷ்டமாய் வாஸுதேவாக்யமான பரஞ்சோதியை அணுகினவனுக்கு கர்மக்ருத ஸ்வரூபதிரோதாநம் தொலைவதாகிற முக்தி

சொல்லப்பட்டுள்ளது. ஸம்பத்ய—பரஞ்சோதியை யணுகி; ஆவிர்ப்பாவ:—ஸம்ஸார தசையில் மறைந்திருந்த அபஹதபாப்மத்வாதி குணாஷ்டகம் மறைவு தொலைந்து வெளிப் படுவதுதான் மோக்ஷமென்பது; ஸ்வேநரூபாத்—ச்ருதியில் * ஸ்வேந ரூபேண அபி நிஷ்பத்யதே * என்று சொல்லியிருக்கையாலே. என்பது ஸூத்ரத்தின் பொருள். * ஏஷ ஸம்ப்ரஸாதோ(அ)ஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரம்ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபி நிஷ்பத்யதே * என்கிற ச்ருதியில் பரஞ்சோதியை யணுகினவுடனே விளைவதாகச் சொல்லப்பட்ட அபிநிஷ்பத்தி யானது ஏற்கெனவேயிருந்த ஸ்வரூபத்தின் ஆவிர்ப்பாவமே யொழிய அபூர்வமானதோர் ஆகாரத்தின் உத்பத்தியன்று என்றபடி. இங்ஙனே பொருளல்லாவிடில் ரூபேண என்பதற்கு ஸ்வேந என்று விசேஷணமிட்டிருப்பது வியர்த்தமாகும். ஏற்கெனவேயுள்ள ஸ்வரூபந்தான் * ஸ்வேந * என்பதனால் தெரிவிக்கப்படும். உள்ள ஸ்வரூபத்திற்கு ஆவிர்ப்பாவமாவது என்ன வென்றால்; மறைந்திருந்தவது மறைவு நீங்கி உள்ளபடி வெளிப்படுவதேயாம். ஜீவாத்மாவின் இயற்கையான ஸ்வரூபம் அபஹத பாப்மத்வாதிகளான எண் குணங்களுடைமை என்பது ஸூத்ரகாரரே நிர்ணயித்ததொன்றும். அப்படிப்பட்ட ஸ்வரூபம் ஸம்ஸாரதசையில் ப்ரகாசம் பெறாமல் திரோஹிதமாயிருந்தது. இவ்விஷயம் * பராபித்யாநாத்து திரோஹிதம் ததோ ஹ்யஸ்ய பந்தவிபர்யயௌ * என்னும் ஸூத்ரத்தில் தெரிவிக்கப்பட்டது. ஜீவாத்மாவின் அந்த ஸ்வரூபமானது, பராபித்யாநாத்—பரமபுருஷ ஸங்கல்பத்தாலே, திரோஹிதம்—மறைந்திருந்தது. ஏனென்றால்; அஸ்ய—இந்த ஜீவனுடைய, பந்தவிபர்யயௌ—ஸம்ஸாரபந்தமும் மோக்ஷமும்; தத:—பரமபுருஷ ஸங்கல்பத்தாலேயே ஆகின்றனவன்றோ. என்பது ஸூத்ரத்தின் பொருள். அபஹத பாப்மத்வாதிகளான ஸ்வாபாவிகாகாரத்திற்குத் திரோதானமாவது—அதனுடைய கார்யகரத்வமில்லாமையேயாம். இதற்கு ஹேது ஏதென் னில்; அநாதிகருமமடியான பகவந்நிக்ரஹ ஸங்கல்பமே. அந்த ஸங்கல்பம் நிவ்ருத்தமான வளவில் ஸத்ய ஸங்கல்பத்வாதி குணங்கள் கார்யகரமாகையாலே திரோதாந நிவ்ருத்தி யுண்டாகிறது. அதுதான் ஸ்வரூபாவிர்ப்பாவமெனப்படுகிறது.

18. இந்த நியாயம் ஞானம் முதலிய மற்ற குணங்களிலுமொக்கும். ஞானமுங் கூட ஸம்ஸாரதசையில் கருமத்தினால் ஸங்குசிதமாய், முக்திதசையில் ஸங்கோச ஹேது வான கருமம் தொலைந்ததனால் இயற்கையான விகாஸாவஸ்தையையடைகிறது. ஞானத் திற்கு ஸங்கோசமாவது விஷயங்களைப் பரிமிதமாகக் கொள்ளுகை. விகாஸமாவது, * ஸர்வம் ஹ பச்ய: பச்யதி * என்று ச்ருதிஸித்தமான உள்ளது உள்ளபடி ஸர்வவஸ்துக்களையும் ஸாக்ஷாத்கரித்தல். ஆக, பரஞ்சோதியையணுகினவனுக்கு கர்மநிபந்தந ஸ்வரூப திரோ தாநத்தின் நிவ்ருத்தியாகிற முக்தி சொல்லப்பட்டதாயிற்று. திரோதாநம் தொலையவே ஸர்வ வஸ்துக்களையும் உள்ளபடி ஸாக்ஷாத்கரிக்கவல்லவனுய்க் கொண்டு பரம புருஷனை அநுபவிக் கிறானென்னுமிடம் அடுத்ததான * அவிபாகேந த்ருஷ்டத்வாதிகரணத்தில் ஸித்தாந்தீகரிக்கப்பட்டுளது.

## — அவிபாகேந த்ருஷ்டத்வாதிகரணமும் அத்வைதவாத ப்ரதிகூலம் —

19. * அவிபாகேந த்ருஷ்டத்வாத் * (4–4–4) என்கிற ஸூத்ரமானது—முக்தன் பரம புருஷனை அவிபாகேந அநுபவிக்கிறான் (அதாவது) பரப்ரஹ்மத்திற்கு அப்ருதக்ஸித்த விசேஷணமாய்க் கொண்டு அநுபவிக்கிறான்; [த்ருஷ்டத்வாத்] யதாவஸ்திதமான தன்னுடைய ரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்பட்டபடியினாலே என்னும் பொருளுடையது. ஜ்ஞான ஸங்கோச கங்களான கருமங்களில் நின்றும் விடுபட்டு நிரதிசயவிகாஸாவஹஜ்ஞாநசாலியான

முக்தன் ததீயஶேஷத்வாத்மிதி ப்ரகாரதயா அப்ருதக்ஸித்த விஶேஷணமாய்க் கொண்டு பரப்ரஹ்மத்தை யநுபவிக்கிறானென்பது தேர்ந்த கருத்து: இங்கே பூர்வபக்ஷமென்னவென்றால்; பரஞ்சோதியை யணுகின முக்தன் தன்னைப் பரமாத்மாவில் வேறுபட்டவனாக அநுபவிக்கிறானேயொழிய ஒற்றுமைப்பட்டதாக அநுபவிப்பதில்லை; அவிபாகமென்பது அபேதரூபமாயிருந்தால் * ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா * என்கிற ச்ருதி விரோதிக்கும். 'தகப்பனோடு கூட மகன் சென்றான்' என்றால் இருவர்க்கும் எப்படி பேதம் ஏற்படுகிறதோ அப்படியே "ப்ரஹ்மணா ஸஹ அச்நுதே" என்கிற இவ்விடத்திலும் பேதம் ஏற்பட்டே தீரும். அவிபாகமென்பது அப்ருதக்ஸித்தவிஶேஷணஸ்வரூபமென்று கொண்டால் * நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி * என்கிற ச்ருதியிலோதப்பட்ட பரம ஸாம்யாபத்தி விரோதிக்கும். ப்ரகார ப்ரகாரி பாவேந வைஷம்யம் கொள்ளுமளவில் பரம ஸாம்யம் விரோதிக்குமன்றோ. ஆக இந்த பூர்வபக்ஷத்தின்மேல் ஸித்தாந்தமென்னவென்றால்; அவிபாகேந என்பதற்கு—பரம புருஷனுக்கு அப்ருதக்ஸித்த விஶேஷணமாய்க் கொண்டு என்று தான் பொருள்; * ய ஆத்மநி திஷ்டந்... யஸ்யாத்மா ஶரீரம் * இத்யாதி ச்ருதிகளாலே ஜீவாத்மா பரமாத்மாவுக்கு ஶரீர பூதனாகச் சொல்லப்படுகையாலே, ஶரீரத்வம் அப்ருதக்ஸித்த விஶேஷணஸ்வரூபமாகையாலேயென்றுணர்க. பரம ஸாம்ய ச்ருதி விரோதமும் வாராது; பரப்ரஹ்ம குணாநுபவத்தில் மட்டும் பரமஸாம்யம் விவக்ஷிதம். திராசில் ஒரு தங்கக் கட்டியையும் கருங்கல் கட்டியையுமிட்டு நிறுத்துப் பரமஸாம்யம் சொல்லுமளவில் இந்த ஸாம்யம் எடையில் மட்டுமேயொழிய பெருமையிலுமன்றே.

## — இங்குப் பிறர்சொல்லும் பொருளை இதரவ்யபதேஶாதி கரணத்தைக் கொண்டு நிரஸித்தல் —

20. * அவிபாகேந த்ருஷ்டத்வாத் * என்னும் ஸூத்ரத்திற்கு அத்வைதிகள் சொல்லும் பொருளேதோ வென்னில்; அவிபாகேந—முக்தனானவன் ப்ரஹ்மத்திற்காட்டிலும் வேறுபடாமல் நிற்கிறான். த்ருஷ்டத்வாத்—* தத் த்வமஸி * முதலான ச்ருதிகளில் அங்ஙனே காணப்பட்டபடியாலே—என்பதாக. இப்பொருள் ஒருபடியாலும் சேராது. ஜீவாத்ம பரமாத்மாக்களின் ஐக்யம் *தத்த்வமஸி ச்ருதியினால் தேறுகின்றதென்பதை ஸூத்ரகாரர் முன்னமே நிரஸித்திருக்கையாலே அந்த அர்த்தம் நெஞ்சாலும் நினைக்கத்தகாததலால் ஸூத்ரத்திலுள்ள * த்ருஷ்டத்வாத் * என்கிற ஹேதூக்திக்கு 'தத்த்வமஸிச்ருதியில் ஜீவப்ரஹ்மங்களுக்கு ஐக்யம் காணப்பட்டபடியாலே என்று பொருள் கூறுதல் பொருந்தாது. இரண்டாமத்யாயம் முதல் பாதத்தில் இதரவ்யபதேசாதிகரணமுள்ளது. அதில் பூர்வபக்ஷமென்ன? ஸித்தாந்தமென்ன? என்று பார்க்கவேணும். * தத்த்வமஸ்யாதி ச்ருதிகளில் ஜீவ ப்ரஹ்மங்களுக்கு அபேதம் தெரியவருவதால் ப்ரஹ்மத்தை ஜகத் காரணமாக ஒப்புக்கொண்டால் தனக்குத் தான் ஹிதம் செய்து கொள்ளாமை முதலிய தோஷங்கள் ப்ரஸங்கிப்பதால் ப்ரஹ்மம் ஜகத்காரணமென்கிற பக்ஷம் பொருந்தாதென்று ஶங்கை; ஜீவப்ரஹ்மங்களுக்குப் பரஸ்பர பேதமே ச்ருதிஸித்தமாகையால் சங்கித்த தோஷங்களுக்கு ப்ரஸக்தியில்லையென்பது ஸமாதானம். அவ்வதிகரணத்திலுள்ள ஸூத்ரங்களாவன;—* இதரவ்யபதேஶாத் ஹிதாகரணாதி தோஷப்ரஸக்தி: * அதிகந்து பேதநிர்தேஶாத் * அஶ்மாதிவச்ச தநுபபத்தி: * என்பன. இவற்றுள் முதல் ஸூத்ரம் பூர்வபக்ஷ ஸூத்ரம். மற்றவையிரண்டும் ஸித்தாந்த ஸூத்ரங்கள். இந்த பூர்வபக்ஷஸித்தாந்தங்களை விவேகிகள் நன்கு மனத்தில் கொள்ள

வேணும். ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்னும் பலவகைப்பட்ட துக்கங்களினுல் பீடிக்கப்பட்டுக் காண்கிற ஜீவவர்க்கமும், இப்படிப்பட்ட பீடைகளையுண்டாக்குகிற ப்ரஹ்மமும் வேறுபட்டதன்றிக்கே ஒரே தத்வமாயிருந்தால் ப்ரஹ்மம் தனக்குத் தானே அஹிதங்களைச் செய்துகொள்வதும் ஹிதங்களைச் செய்துகொள்ளாமையுமாகிற தோஷம் ப்ரஸங்கிக்கமாட்டாதா? ஜீவப்ரஹ்மங்களுக்கு பேதத்தை இசைந்தாலொழிய இந்த தோஷத்தைப் பரிஹரிக்க வழியுண்டா? என்னுமிதைக் கூட ஆராயமாட்டிற்றிலரே. * இதர வ்யபதேஶாத் ஹிதாகரணாதி தோஷ ப்ரஸக்தி: * என்கிற ஸூத்ரத்திற்கு 'ப்ரஹ்ம ஜீவாபேதே ஹிதாகரணாதி தோஷ ப்ரஸங்க:' என்று பொருள். ஶங்கர பாஷ்யத்தில் தேறுகிற அர்த்தமும் இதுவேதான்.

## — * அஶ்மாதிவச்ச தத நுபபத்தி: * என்கிற ஸூத்ரத்தினுல் பிறருடைய அபார்த்த நிரஸநம்.

21. ச்ருதிகளின் ஜீவப்ரஹ்மங்களுக்கு பேதம்போலே அபேதமும் சொல்லப்பட்டிருக்கக் காண்கையாலே அபேதச்ருதிக்குத்தான் ப்ராபல்யம் கொடுத்தாலென்ன? என்று ஶங்கித்துக்கொண்டு * அஶ்மாதிவச்ச தத நுபபத்தி: * (2—1—23) என்கிற ஸூத்ரம் அவதரித்துள்ளது. இதில் "தத நுபபத்தி:" என்றதில் தச்சப்தார்த்தம் என்னவென்றால், பூர்வபக்ஷ ஸூத்ரத்தில் * இதரவ்யபதேஶாத் * என்றதனுலே விவக்ஷிதமான ஜீவப்ரஹ்மைக்யமே அர்த்தம். அச்மாதிவத்—பாஷாணலோஷ்டாதிகளுக்கு ப்ரஹ்மத்தோடுகூட ஸ்வரூபைக்யம் எப்படி அநுபபந்நமோ, அப்படியே ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவோடு ஸ்வரூபைக்யம் அநுபபந்நம் என்று ஸூத்ரார்த்தம் தேறிற்று. ஜடத்திற்கும் அஜடத்திற்கும் ஸ்வரூபைக்யம் கூடாதாப்போலவே ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவோடு ஸ்வரூபைக்யம் கூடாது என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறது. ஒருவஸ்து கருமபலன்களை புஜிக்கக்கூடியதாயும், மற்றொருவஸ்து அதை புஜிக்கக்கூடாததாயுமிருக்கும்போது இவ்விருபொருள்களுக்கும் ஸ்வரூபைக்யமென்று வாய்திறக்கவும் முடியாதே.

## — * அத்விதீயச்ருதியின் பொருள் நிர்வாஹம். —

22. * ஏகமேவாத்விதீயம் * என்கிற ச்ருதியைச் சிக்கனப்பற்றிக்கொண்டு அத்வைதிகள் போராடுவதும் பயனற்றது. 'சோளமஹாராஜன் உலகத்தில் அத்விதீயனுயிருக்கிறுன்' என்றால் அவனுக்கு நிகரான வேறொரு ராஜா இல்லையென்றதாகுமே யொழிய, சோளராஜனுக்கு மக்களில்லை, மனைவியில்லை, மனையில்லை, உடுக்கத் துணியில்லை, உண்ணச் சோறில்லை. என்றதாகுமோ? அதுவே அர்த்தமானுல் அந்த வாக்கியம் சோளமஹாராஜனைப் பழிப்பதாகுமேயல்லது புகழ்வதாகாதல்லவா? அத்விதீய பதத்தை உலகத்தில் எத்தனை யிடங்களிலே ப்ரயோகிக்கக் காண்கிறோம்! ஓரிடத்திலாவது பிறர் கூறும் விபரீதார்த்தம் காண வழியுண்டோ? * அத்விதீயம் ப்ரஹ்ம * என்றவிடத்திலும் ப்ரஹ்மத்திற்கு ஸமானமான வேறொரு வஸ்துவில்லையென்றதாகுமே யொழிய ப்ரஹ்மத்துக்கு குணமில்லை, விக்ரஹமில்லை, விபூதியில்லை, நித்யஸூரிகளான ஜீவர்களில்லை, உலகமில்லை என்றதாகுமோ? ஒருகாலுமாகாது. வேதம் முதலிய ப்ரமாணங்களினுல் ஸித்தமான ஸகல ஜகத்துக்களும் ஜீவாத்மாக்களும் அனந்த குணகணங்களும் இந்த அத்விதீய ச்ருதியால் ஒருகாலும் இல்லை செய்யப்

படமாட்டா. ப்ரஹ்மத்துக்கு அனந்த குணங்களும் உபய விபூதியும் அனந்த ஜீவராசிகளும் உண்டென்பது சாஸ்த்ர ஸம்ப்ரதிபந்நம். * ந தத்ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே * என்ற ச்ருதிக்குப் பொருந்தியதன்றோ நாம் உபபாதிக்கும் பொருள். * பாதோஸ்ய விச்வா பூதாநி த்ரிபாதஸ்யாம்ருதம் திவி * என்கிற ச்ருதியானது ஸர்வ பூதங்களையும் ஈச்வரனுடைய விபூதியின் ஏகதேசமாகச் சொல்லுகிறது. இப்படி பல ச்ருதி ஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிகளால் ஸித்தமாகும் குணவிசிஷ்டத்வாதிகளை மறுக்காமலும் லோக வ்யவஹாரத்தை யொட்டியும் அத்விதீய ச்ருதிக்கு அர்த்தம் செய்வதில் உள்ள ஔசித்யத்தைப் பிறர் அறியகில்லார். ப்ரஹ்மத்திற்கு ஒப்பான வேறொரு பொருள் இல்லை யென்பதே அதன் உண்மைப் பொருளாகும். இதை ஆளவந்தார் * யதா சோள ந்ருபஸ் ஸம்ராட் அத்விதீயோஸ்தி பூதலே * இத்யாதிகாரிகைகளினால் வெகு அழகாக விளங்க வைத்தார். ஸ்ரீ பாஷ்யாதிகளிலும் இவ்வர்த்தம் விசதீக்ருதம். அவற்றை ப்ரத்யாக்யாநம்பண்ண இவர்களிடம் யாதொருஸாமக்ரியும் கிடையாது.

## — தத்த்வமஸிச்ருதியின் அபார்த்தநிரஸநம் —

23. இவ்வண்ணமாகவே * தத்த்வமஸி வாக்யார்த்தத்திலும் தெளிவு பிறப்பிக்கிறோம். சாந்தோக்யோபநிஷத்திலேயே ஆறாவது அத்யாயத்திலேயே எட்டாவது கண்டம் முதல், பதினாறாவது கண்டம் வரை ஒவ்வொரு கண்டத்திலும் தத்த்வமஸி யுள்ளது. பூர்வோத்தர வாக்யங்களோடு சேர்ந்து இந்த வாக்யம் * ஐததாத்ம்யமிதம் ஸர்வம் தத்ஸத்யம் ஸ ஆத்மா தத்த்வமஸி ச்வேதகேதோ * என்றோதப்பட்டுள்ளது. இவ்வத்யாயத்தில் மஹர்ஷி உத்தாலகர் தமது குமாரன் ச்வேதகேதுவுக்கு ப்ரஹ்ம ஸ்வரூபத்தை உபதேசிக்கிறார். எட்டாவது கண்டத்திற்கு முன் ப்ரஹ்மம் ஜகத்துக்கு உபாதாந காரணமும் நிமித்த காரணமுமாகுமென்று சொல்லி அதை மிக விரிவாக த்ருஷ்டாந்த பூர்வகமா யுபதேசிக்கிறார். [தத் த்வமஸி ச்வேதகேதோ!] இந்த வாக்யத்தில் நான்கு பதங்களுள்ளன. உத்தாலகர் தமது புத்திரனை ச்வேதகேதுவை விளித்து 'த்வம் தத் அஸி' என்கிறார். ச்வேதகேதுவே! நீ அதுவாயிருக்கிறாய் என்கை. இங்கு த்வம் என்பதனால் ச்வேதகேதுவையும், தத் என்பதனால் ப்ரஹ்மத்தையும் குறிக்கிறது. ஜீவாத்மாவான ச்வேதகேதுவைப் பார்த்து நீ பரமாத்மாவா யிருக்கிறாய் என்று சொல்லப்படுகிறது. ஜீவாத்மாவுக்கும் ப்ரஹ்மத்திற்கும் அபேதம் காட்டுவது இந்த வாக்யத்தின் முழுநோக்கு. இதனால் ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றே, இரண்டு பொருள்களல்ல என்றதாகிறது—என்பதாகப் பிறர் சொல்லுவது.

24. பெண்ணுக்கு வரன் தேடப்போன வொரு பிதா, குலீநனாய் ஸுந்தரனாய் யுவாவாய் பண்டிதனாய் தனிகனாயிருக்கிற ஒரு பிள்ளையைத் தாம் பார்த்து வந்ததாகச் சொல்லி 'அந்த வரனைப் பாருங்கள்' என்றால் இங்கு அந்த என்கிற சொல்லானது பூர்வோக்த குலீநத்வாதி குணயுக்தனையே சொல்லுமென்பது எப்படி நிர்விவாதமோ, அப்படியே ப்ரக்ருதத்தில் தத்பதமும் அங்கு முன்னே ப்ரஸ்துதமான ஸர்வஜ்ஞத்வ ஸத்ய ஸங்கல்பத்வ ஸகல ஜகத் காரணத்வாதி விசிஷ்டமான ப்ரஹ்மத்தையே சொல்லுமென்பதும் நிர்விவாதம். இனி த்வம் பதத்திற்கு வெறும் ச்வேதகேது பொருளாக மாட்டான்; சோக மோஹ அஜ்ஞாநாதியுக்தனாய் ஸம்ஸாரியாய் முமுக்ஷுவான ச்வேதகேதுவே பொருளாகக் கடவன். இனி 'தத் த்வமஸி' என்ற மூன்று சொற்களையும் சேர்த்துப் பொருள் கொண்டால், அஜ்ஞாந சோக மோஹாதி யுக்தனாய் ஸம்ஸாரியாய் அசக்தனாய் முமுக்ஷுவான நீ, நித்யாநந்த ஸ்வரூபியாய்

ஸர்வஜ்ஞமாய் நித்யமுக்தமாய் ஸர்வஶக்தியாய் ஸம்ஸார ஸம்பந்த ரஹிதமாய் ஸர்வஜகத் காரணமான அந்த ப்ரஹ்மமா யிருக்கிறாய் என்று பொருள் பட்டதாக விளங்கும். இப்பொருள் யுக்தமாகுமோ? 'ஜலம் அக்நியே' என்றுவது, 'இருளே ஸூர்யன்' என்றுவது ஒருவன் சொன்னால் இதை யுக்தமென்று யாரேனும் அங்கிகரிக்க முடியுமா? ஜலமே நெருப்பானால் குளிர்ச்சியும் வெப்பமுமாகிய பரஸ்பர விருத்தமான இரண்டு தர்மங்கள் ஓரிடத்தில் சேர்ந்திருக்க நேரிடும். அவை ஓரிடத்தில் சேர்ந்திருக்கக் கூடுமானால் அவை பரஸ்பர விருத்த தருமங்களாகமாட்டா, ஆகவே பரஸ்பர விருத்தங்களான இரண்டு தன்மைகளை ஓரிடத்தி லிருப்பனவாகக் கர்ட்டவல்ல 'ஜலமே நெருப்பு' என்கிற அந்த வாக்யமானது யுக்தி விருத்தமும் ப்ரத்யக்ஷ விருத்தமுமான அர்த்தத்தைக் காட்டுவதால், அப்ரமாணமெனப்படுகிறது. அதுபோலவே * தத் த்வமஸி வாக்யமும்—ஸர்வோத்துங்கமான பரப்ரஹ்மத்தையும் ஸர்வாதமனான ஸம்ஸாரி ஜீவனையும் ஒன்றாகக் காட்டுவதாயிருந்தால் பரஸ்பர விருத்த தர்ம ஸமாவேஶம் கொள்ள நேரிடும். அதனால் இந்த வாக்யமும் அப்ரமாணமாக வேண்டி வரும். ஆகவே இந்த வாக்யத்திற்கு அங்ஙனே பொருள் கொள்ளலாகாது. இங்கு ஜஹத்-அஜஹல் லக்ஷணை கல்பித்துப் பொருந்த விடலாமென்கிற பிறருடைய வாதம் எம்முடைய பல நூல்களில் தள்ளுண்டதாகையாலே தலைகாட்டாது.

25. ஸர்வஜ்ஞமாய் ஆனந்த மயமாய் ஜகத் காரணமா யிருப்பது சுத்த ப்ரஹ்மமென்றும், மாயை யென்கிற உபாதியோடு கூடிய ப்ரஹ்மம் அஜ்ஞமாய் ஸம்ஸாரியாய் துக்கியாய் கார்யமாயிருக்கிறதென்றும், பிறர் கூறும் கூற்று சிறிதும் பொருந்தாது. ஸச்சிதாநந்த ஸ்வப்ரகாசமான ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் மாயை யென்கிற உபாதியின் ஸம்பந்தமே உண்டாக முடியாது. ப்ரகாசமயனான ஸூர்யனிடத்தில் இருளின் ஸம்பந்தமுண்டாவது எப்படி கூடாதோ, அப்படியே ஸ்வப்ரகாஶமான ப்ரஹ்மத்திலும் மாயா ஸம்பந்தம் பொருந்தாது. பொருந்துமாகில் ப்ரஹ்மம் ஸ்வப்ரகாஶமாக மாட்டாது. இருளை அகற்ற முடியாதவன் ஸூர்யனுவனோ? ப்ரஹ்மத்திற்கு மாயா ஸம்பந்தம் உண்டாகக் கூடுமென்றே கொண்டாலும், இதனால் சுத்த ப்ரஹ்மம் வேறாய், மாயாஶபலித ப்ரஹ்மம் வேறாய்விடுமோ? ப்ரஹ்ம ஸ்வரூபம் ஒன்றேயொழிய இரண்டன்று. பிறருடைய கல்பனை நிராலம்பமானது. ப்ரஹ்ம ஸ்வரூபத்திற்கு மாயாஸம்பந்தம் ஒப்புக்கொள்வதனால் எவ்வித ஸமாதானமும் வந்திடாது. மாயாவாதிகளென்று பட்டம் பெறுவதே லாபம். மாயாஶபலித ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் ஒப்புக்கொள்ளும் அஜ்ஞானம் ஸம்ஸரணம் முதலிய தோஷங்களெல்லாம் சுத்த ப்ரஹ்மத்திலும் இருப்பதாகவேயாகும்.

26. ப்ரஹ்ம ஸ்வரூபம் அகண்டமானது. அதில் ஒருபாகம் மாயா ஸம்பந்தமுடையதென்றும் மற்றொருபாகம் சுத்தமானதென்றும் சிலர் சொல்லுவதுபோலாது. ஏகதேசத்தில் மாயா ஸம்பந்தத்தை யொப்புக் கொண்டு அவ்விடத்தில் அஜ்ஞாநாதிகளைக் கல்பிப்பதும், மற்றொரு தேசத்தை சுத்தமாகவைத்து அதில் ஜ்ஞாநாநந்தாதிகள் இருப்பதாகச் சொல்லுவதும் அடியோடு பொருந்தாது. ஒரு மனிதனுக்கு ஓர் அவயவத்தில் வ்ரணம் ஏற்பட்டு அதனாலாகிய துயரமும், மற்றோரவயவத்தில் சந்தனம் பூசி அதனாலாகிய ஸுகமும் இருப்பதாகச் சொல்வதொக்குமிது. அகண்டமான ப்ரஹ்மத்தை இரு துண்டாகச் செய்தாலொழிய ஸ்வச்சந்த கல்பனைகளால் யாதொரு ஸமாதானமும் செய்ததாகாது. ஆக, * தத்த்வமஸி வாக்யத்திற்குப் பிறர் கூறும் பொருள் ஒருபடியாலும் பொருந்தாதென்று முடிந்தது.

27. பொருந்தும்பொருளாவது, மநுஷ்யன் பசு ம்ருகம் முதலான சப்தங்கள் பாஞ்சபௌதிகமான சரீரத்தளவிலே நிற்பனவாயினும், 'மனிதன் ஆனந்திக்கிறான், மிருகம் துன்புறுகிறது' என்பனபோன்ற வ்யவஹாரங்களில் மநுஷ்யசரீரகனான ஆத்மாவும் ம்ருகசரீரகனான ஆத்மாவுமே அர்த்தமாகிறபடியை அனைவருமறிவர். அசேதனமான சரீர பிண்டத்திற்கு ஸுகதுக்கங்கள் கூடாவாகையால் சரீர வாசக சப்தங்கள் சரீரியளவிலே நின்றேதீரும். இனி ப்ரக்ருத விஷயத்திற்கு வருவோம். ஸர்வ வ்யாபகமான ப்ரஹ்மம் சேதனாசேதனரூப ஸகல பதார்த்தங்களிலும் வியாபித்து நிறைந்திருக்கின்றது. பாஞ்ச பௌதிக சரீரத்தினுள்ளே ஜீவாத்மா வியாபித்து நின்று தரித்து நடத்துவதுபோலவே பரப்ரஹ்மமும் ஸகல பதார்த்தங்களினுள்ளும் வியாபித்து தரித்து நின்று நியமித்து நடத்துகிறபடியாலே ஸகலத்திற்கும் தான் சரீரியாய் ஸகலமும் தனக்கு சரீரமாய் இருக்கும்படி. * யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்—யஸ்யாத்மா ஶரீரம் * இத்யாதி ச்ருதிகளில் ஸகல சேதநாசேதநப் பொருள்களும் ப்ரஹ்மத்திற்கு சரீரமென்றும், அனைத்துக்கும் அது உயிரென்றும் சொல்லப்பட்டிருக்கையாலே, சரீர வாசகமான சப்தம் சரீரியளவும் காட்டியே தீரும்படியை முன்னமே உபபாதித்திருக்கையாலே இப்போது தத்த்வமஸி வாக்யத்தை நிர்வஹிப்பது மிக எளிதாய்விட்டது. ஜகத்காரணமாய் தத் என்னப்பட்ட ப்ரஹ்மமும், ச்வேதகேது சரீரகமாய் த்வம்பத நிர்திஷ்டமான ப்ரஹ்மமும் ஒன்று என்றதாகத் தேறுகிறது. இப்போது எவ்விதமான விபத்துமில்லை. ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்று எனச் சொல்லுவதாய் இருந்தால் தான் கீழே நிரூபித்தபடி விருத்த தர்மங்கள் ஓரிடத்தில் சேரவேண்டி வரும். ஜகத் காரணமான ப்ரஹ்மமும் ச்வேதகேது சரீரகமான ப்ரஹ்மமும் ஒன்று என்னும்போது எவ்விதமான பாதகமுமில்லையன்றோ.

## — சாரீரகமீமாம்ஸையில் சரமஸூத்ரவிமர்சம் —

28. 'ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு ஐக்யம்' என்று வாய்திறக்கவும் முடியாதபடியன்றோ சாரீரக மீமாம்ஸையின் அந்திமாதிகரணம் [ஜகத்வ்யாபாரவர்ஜாதிகரணம்] அவதரித்திருக்கின்றது. சேதந பரமசேதநர்களுக்கு ஐக்யமேயாகிற பக்ஷத்தில் 'ஜகத்வ்யாபாரவர்ஜம்' என்று ஒன்றை வர்ஜிக்க வேண்டியதில்லை; முக்தனுக்குப் புநராவ்ருத்தி சங்கையைப் பண்ணி புநராவ்ருத்தி கிடையாதென்று சொல்லவும் வேண்டியதில்லை. இவற்றுக்கு ப்ரகாராந்தரத்தாலே நிர்வாஹம் சொல்லுகிறோமென்னில்; ஒரு சாஸ்த்ரத்திற்கு மிணுங்காததுப் போலக் கல்பிதமுமான அந்த நிர்வாஹம் மித்யா வாதங்களுக்குள்ளே தலையான மித்யா வாதமாய் நிற்குமத்தனை. * ஸ ஏகதா பவதி * என்றும், * ரஸோ வை ஸ: । ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி * என்றும் * பரமம் ஸாம்யமுபைதி * என்றும் இங்ஙனே பல நூற்றுக் கணக்கான ப்ரமாணங்களுக்குச் சிறிதும் பொருந்தாத ஐக்யவாதம் அரண்ய ருதிதமத்தனை. ஆயிரக் கணக்கான ச்ருதி வாக்யங்கள் முக்தனுக்கு ப்ரஹ்ம ப்ராப்தியையும் ததநுயாத்ராதிகளையும் ஸ்பஷ்டமாகச் சொல்லா நிற்க * ப்ரஹ்மைவ பவதி * என்கிற ஒரு வாக்யம் இவர்களுக்கு என்ன ஸாதித்துத் தரும். "அயம் மாணவக: ஸிம்ஹ ஏவ, அக்நிரேவ" என்று தாராளமாகச் சொல்லி வருகிறோம். இதனால் மாணவகன் மநுஷ்யத்வத்தில் நின்றும் விலகி ஸிம்ஹத்வத்தை யடைந்து விடுவனோ! அதையும் விட்டு அக்நித்வத்தையடைந்து விடுவனோ? * ஸாவகாச உபசாரக: * என்பது ஸர்வமதஸம்ப்ரதிபந்நமானதே. தைத்திரீய யஜுஸ்ஸம்ஹிதையில் இரண்டாவது காண்டம் முதல் ப்ரச்நத்தில் * விஷ்ணுரேவ பூத்வேமாந் லோகாநபிஜயதி * என்றுள்ளது. இது பரலோகத்துச் செய்தியன்று. இஹலோகத்துப்

பலனைச் சொல்லுகிறது. ஆனால் இதில் விவாதம் வேண்டா; எவ்விடத்துப் பலனாகவாவது இருக்கட்டும். இங்கு ஏவகாரத்திற்கு பாஷ்யகாரர்கள் என்ன அர்த்தம் செய்திருக்கிறார்களென்று பார்க்கலாமே, எந்த அபிப்ராயத்தாலே இங்கு * விஷ்ணுரேவ பூத்வா * என்று ஏவகாரம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறதென்று இதைக் கூட விமர்சிக்க அர்ஹதையில்லையோ இவர்களுக்கு? * வைகுண்டேது பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:, ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ * என்றும் * யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா: * என்றும் இப்படி எத்தனை கோடி ப்ரமாணங்கள் விளங்குகின்றன! ஒரு ப்ரமாணத்திற்கும் சேராதபடியும், ஸகல ப்ரமாணங்களையும் கண்ணழித்துக்கொண்டும் வைதிகர்களென்று பேர் சுமப்பவர்கள் பேசுவதும் எழுதுவதும் என்னே?

29. சாஸ்த்ரங்கள் கரைகட்டாக் காவேரி போலே பரந்திருந்தாலும் அவற்றில் தத்வஹித புருஷார்த்தங்களென்று மூன்றை முக்கியமாக உபஜீவிப்பவர்கள் ஸாரஜ்ஞர்கள். மூன்றிலும் விபர்யயமேயாயிற்று இவர்களுக்குள்ளது. முடிவாகப் புருஷார்த்த நிர்ணயத்தில் பெருமோசமாயிருக்கிறது. முக்தாத்மா அங்குச் சென்று மஹாநந்தமநுபவிப்பதாக உபநிஷத்துக்கள் முக்தகண்டமாக ஓதுகின்றன. சேதநனுக்கு எதனால் மஹாநந்தமென்னில், ஸ்வரூபாநுரூபமான சேஷவ்ருத்தியினாலேயே மஹாநந்தம். * வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா * என்று வேதமே ஸ்ரீராமாயணமாக வடிவெடுத்ததென்று த்ரிமதஸ்தர்களும் அநுஸந்தித்து வருகிறோம். அதில், கைங்கர்யமே பரம புருஷார்த்தமென்று காட்டுவதற்காகவே லக்ஷ்மணனுடைய அவதாரம். வநவாஸத்தில் * ரமமாணா வநே த்ரய: * என்று ராமலக்ஷ்மண ஸீதைகள் மூவரும் ஆனந்தித்ததாகச் சொல்லிற்று. ஸ்ரீராம ஸீதைகளின் ஆனந்தத்தைப்பற்றி விசாரமில்லை. லக்ஷ்மணனுடைய ஆனந்தம் எதனாலென்றால் * அஹம் ஸர்வம் கரிஷ்யாமி * என்று அவன் தானே ருசியுடன் வெளியிட்டபடி இடைவிடாது செய்யும் கைங்கர்யத்தினாலேயே யென்பது வெளிப்படை. * இமௌ ஸ்ம முநிசார்தூல கிங்கரௌ ஸமுபஸ்திதௌ * என்று தாசரதிகளிருவரும் கைங்கர்யத்திற்காகவே வந்திருப்பதாக விச்வாமித்ரரிடம் சொல்லியிருப்பதையும் கவனிக்கவேணும். இதெல்லாம் வேதார்த்தமே யொழிய ஸாமாந்யமான அர்த்தமன்று.

30. சாரீரக மீமாம்ஸையின் முடிவில் * அநாவ்ருத்தி ஸூத்ர—சங்கர பாஷ்யத்தில் ஸூத்ரார்த்தம் சொல்லி முடித்தபின் "ஸம்யக்தர்சந நிரஸ்த தமஸாம் து நித்யஸித்தநிர்வாண பராயணாநாம் ஸித்தைவாநாவ்ருத்தி:" என்றொரு பங்க்தியுள்ளது. இதற்கு ரத்நப்ரபையில் வைத்திருக்கிற அவதாரிகையை நன்கு கவனிப்பது, இவற்றால் ஸகுண ப்ரஹ்மோபாஸகர்களுக்கு மட்டுமே முக்தியென்றும், நிர்குணப்ரஹ்மவாதிகளுக்கு (அதாவது) 'அஹமேவ பரம்ப்ரஹ்ம' என்றிருப்பவர்களுக்கு, கீதை பதினாறாமத்தியாயத்தில் * ஈச்வரோஹமஹம் போகீ * என்று (ச்லோ. 14-ல்) தொடங்கி ச்லோ. 16-ல் என்ன பலன் சொல்லி முடிக்கப்பட்டதோ அந்த பலனே கைபுகுமென்றும் காட்டப்பட்டதாயிற்று. கிம்பஹுநா? ஸூத்ரகாரர் தங்களுக்கு ஒரு வழியும் காட்டவில்லையென்பதை இவர்களுடைய பாஷ்யகாரரே வெளியிட்டு வைத்திருப்பது அபலபிக்கப் போகாது. இங்கு முக்கியமாக ஒரே விஷயம்; மேலே குறித்த விடத்தில் சங்கர பாஷ்ய பங்க்தி * ஸித்தைவ அநாவ்ருத்தி: * என்றுள்ளது; இது இவர்களின் கொள்கைக்கு அத்யந்த விப்ரதீபம். ஆவ்ருத்தியுண்டா இல்லையா என்கிற விசாரத்திற்கே அவகாசமில்லாதபடியன்றோ இவர்களுடைய முக்தி தத்வமிருப்பது.

இப்படியிருக்க 'அநாவ்ருத்திஸ் ஸித்தைவ' என்றெழுதுவது எப்படி பொருந்தும்? '𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌨𑍍𑌯𑌾𑌯𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑍇𑌵 𑌚 𑌅𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌃' என்றன்றோ எழுதியிருக்க வேண்டும்.

31. சாரீரக மீமாம்ஸையில் முதலத்யாயத்தின் மூன்றும் பாதத்தில் முதலதிகரணமான 𑌦𑍍𑌯𑍁𑌭𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑌧𑌿𑌕𑌰𑌣த்தில் *𑌮𑍁𑌕𑍍𑌤𑍋𑌪𑌸𑍃𑌪𑍍𑌯𑌵𑍍𑌯𑌪𑌦𑍇𑌶𑌾𑌤𑍍* *𑌭𑍇𑌦𑌵𑍍𑌯𑌪𑌦𑍇𑌶𑌾𑌚𑍍𑌚* *𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌯𑌦𑌨𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌚* என்கிற மூன்று ஸூத்ரங்கள் பரமதத்திற்கு விசேஷத: வஜ்ரகுடாரங்கள். இவற்றுள் முந்தின ஸூத்ரத்தினால் முக்தி தசையில் ஜீவாத்மா பரமாத்மாவை ப்ராபிப்பதாக ச்ருதியில் சொல்லியிருப்பது எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றது. ஒருவனை ப்ராப்தாவாகவும் ஒருவனை ப்ராப்யனாகவும் சொன்னபோதே பேதம் ஸ்பஷ்ட ஸித்தம்; இது 𑌸𑍂𑌤𑍍𑌰𑌾𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯மாயிற்று. *𑌭𑍇𑌦𑌵𑍍𑌯𑌪𑌦𑍇𑌶𑌾𑌚𑍍𑌚* என்கிற இரண்டாவது ஸூத்ரத்தினால் —ச்ருதியில் ஸாக்ஷாத்தாகவே ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு ஸ்வரூப 𑌭𑍇𑌦𑌵𑍍𑌯𑌪𑌦𑍇𑌶முள்ளதாக வெளியிடப்பட்டது. *𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌯𑌦𑌨𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌚* என்கிற மூன்றுவது ஸூத்ரத்தினால் —ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு ஸ்வரூபைக்யம் சொல்லவொண்ணாமைக் குறிப்பான 𑌹𑍇𑌯𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌾𑌰𑍍𑌹𑌤𑍍𑌵𑌤𑌦𑌨𑌰𑍍𑌹𑌤𑍍𑌵𑌰𑍂𑌪𑌸𑍍𑌵𑌭𑌾𑌵 வைலக்ஷண்யம் எடுத்துக் காட்டப்பட்டது. ஆக இவ்வளவால் *𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑍇𑌦 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵 𑌭𑌵𑌤𑌿* என்கிற முண்டகோபநிஷ𑌦𑍁𑌪𑌸𑌂ஹார வாக்யமானது ஜீவனுக்கு 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑌾𑌵ாபத்தியையே முக்தியாகச் சொல்லுகிறது— என்கிற பிறருடைய ப்ரமம் ஸமூல நிரஸ்தமாயிற்று. இனி ஸர்வ வ்யாப்தமான ப்ரஹ்மத்திற்கு ப்ராப்யத்வம் ஸம்பவிக்கமாட்டாதாகையாலே முக்தி𑌦𑌶ையில் ப்ரஹ்மத்திற்கு ப்ராப்யத்வம் சொல்லுகிற ச்ருதியை அந்ய பரமாக்கவேணுமென்று பிறர் பேசக்கூடும். இது அஸம்பத்தம். *𑌪𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍍* என்கிற முண்டக ச்ருதியில் திவ்யம் என்கிற விசேஷணம் ப்ராப்ய புருஷனுக்கு இட்டிருப்பது நன்கு நோக்கத்தக்கது. 𑌦𑍍𑌯𑍁𑌸𑌂𑌜𑍍𑌞𑌕𑌲𑍋𑌕𑌵𑌿𑌶𑍇𑌷𑌸𑍂𑌚𑌕மன்றோ அதனால் ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்படுகிறது. ஏவஞ்ச, லோக விசேஷத்தில் விக்ரஹ விசேஷத்தோடு கூடி யெழுந்தருளியிருக்கின்ற ப்ரஹ்மத்தின் ப்ராப்தியே முக்ய ப்ராப்தியாக *𑌮𑍁𑌕𑍍𑌤𑍋𑌪𑌸𑍃𑌪𑍍𑌯𑌵𑍍𑌯𑌪𑌦𑍇𑌶𑌾𑌤𑍍* என்கிற ஸூத்ரத்தின் பரம தாத்பர்யமாக அறுதியிடப்படா நிற்க, ஸூத்ரஸித்தமான ச்ருதிதாத்பர்ய நிர்ணயத்திற்கு மிக்வும் விருத்தமாகச் சொல்லுகிறவர்கள் வேதாந்திகளாக முடியாது.

32. உபநிஷத்துக்கள், கீதோபநிஷத்து, ப்ரஹ்மஸூத்ரம், இதிஹாஸ புராணங்கள் முதலான ஸகல சாஸ்த்ரங்களுக்கும் சிறிதும் பொருந்தாதபடி அத்வைதமே தத்துவமென்று சொல்லுமவர்கள் தெளிவு பெறுவதற்கு இவ்வளவு நிரூபணமே பர்யாப்தம். விசிஷ்டாத்வைத ஸர்வஸ்மமென்றே பெயரிட்டு நாம் வடமொழியில் எழுதி வெளியிட்டுள்ள நூலில் இன்னமும் விளக்கமாகக் காண்க. .... .... .... (*)

𑌤𑌸𑍍𑌮𑍈 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌰𑍍𑌯𑌾𑌯 𑌨𑌮𑌃 𑌪𑌰𑌮𑌯𑍋𑌗𑌿𑌨𑍇 ।
𑌯𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌸𑍂𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌮𑌨𑍍𑌤𑌰𑍍𑌜𑍍𑌵𑌰𑌮𑌶𑍀𑌶𑌮𑌤𑍍 ॥

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் எழுதிய
**விசிஷ்டாத்வைத ஸர்வஸ்வம்** முற்றிற்று.

ஸ்ரீரஸ்து.

# ஸ்ரீராமாநுஜன் நெ. 38ன் சிறந்த பகுதி.

(ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.)

---

## — இதில் அடங்கியுள்ள விஷயங்கள் —



---

## முக்கியமான அறிவிப்பு.

தேசிகனைப் பற்றியோ அவருடைய அமுதமொழிகளைப் பற்றியோ விசார ப்ரஸக்தி சிறிதும் ஏற்பட்டிருக்கவில்லை. நவீனர்களின் கற்பனைகளிலுள்ள அபத்த அஸம்பத்தங்கள் மட்டும் பலவாண்டுகளாக நிரூபிக்கப்பட்டு வருகின்றன. அவற்றுக்கு நேர்மையான வழியில் பதில்கள் தெரிவிக்கமுடியாமல் பூர்வாசார்ய நிந்தைகளில் கை வைப்பது மிகத் தவறான வழி. "திருமலைமால் திருமணியாய்ச் சிறக்க வந்தோன் வாழியே" என்ற கற்பனை வாக்கியம் தலைகீழாக விழுந்துவிட்டதென்றால் அதற்கு பதில் சொல்லவேண்டும். தேசிகன் விஷ்ணு கண்டாவதாரமென்பதில் யாதோராக்ஷேபமும் விளைந்ததில்லை. அதைச் சொன்னவர் தவறாகச் சொன்னாரென்பதுமட்டும் இங்கு விஷயம். ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் "கண்டா ஹரேஸ் ஸமஜநிஷ்ட யதாத்மநா" என்று ஸ்வாமி ஸாதித்தாரேயொழிய, "ய: கண்டாத்மநா ஸமஜநிஷ்ட" என்றாரில்லை. "விஷ்வக்ஸேநோ யதிபதிரபூத்" என்றாரேயொழிய "யதிபதி: விஷ்வக்ஸேநோபூத்" என்றாரில்லை. "திருமலைமால் திருமணியே யென வந்தான் வாழியே" என்று திருத்தும் வழியை விட்டு * செய்யதாமரைத் தாளிணையிலே அபசாரப்படுவது அநீதி. மேலே முழுவதும் கவனித்து வாசிப்பது. 3-6-1960.

ஸ்ரீ:
பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சி பிரதிவாதி பயங்கரம்

# அண்ணங்கராசாரியருடைய சபதம்.

## இதுவே என்னுடைய தீவிரமான சபதம்.

1. நவீனர்கள் பதில் சொல்லவேண்டியதாக எனது நூல்களில் பொறிக்கப் பட்டுள்ள விஷயங்கள் நூறுக்குக் குறைந்தவையல்ல. இவற்றில் ஒன்றுக்காவது ஒரு பண்டிதர் தமது உண்மையான பெயருடனே வசவு இல்லாமல் பதில் வெளியிட்டாலும்ஸரி;

2. இவர்கள் எமது ஸம்பிரதாயத்தில் ஏறிட்டுக் கூறும் குற்றங்குறைகளில் ஒன்றுக் காவது பரிஹாரம் செய்ய நாம் தாமதித்தோமானாலும்ஸரி, அன்றே இனி நான் எழுத்துக் கருவியைக் கையால் தொடுவதில்லையென்று தெய்வ ஸந்நிதியில் ப்ரதிஜ்ஞை செய்துவிடுகிறேனென் பதே என்னுடைய சபதம். இங்ஙனே சபதம் செய்து ஒரு பண்டிதர் வெளிவருக. 3—6—60.

— உலகமெல்லாம் கவனிக்கத் தக்கது —

3. "வைணவர்களின் இருகலைகளின் வாழித்திருநாம விமர்சனம்" என்று ஒரு சிறு காகிதம் மயிலாப்பூர் பாலகிருஷ்ண அச்சகத்தில் அச்சிடப்பட்டதாய் நேற்று (1—6—60ல்) காஞ்சீபுரத்தில் பல தென்கலை ஸ்வாமிகளுக்கு போஸ்டு மூலம் கிடைத்திருக்கிறது. இது வரையில் ஏறக்குறைய 25 துண்டுப் பிரசுரங்களில் (சே. கி. வ.) என்கிற கையொப்பம் இருந்து வந்தது. இந்த துண்டுக் காகிதத்தில் (K. வரதராஜன், T. நகர்.) என்றிருக்கிறது. நமக்கு விஷயத்தில் நோக்கேயல்லது வ்யக்தியில் நோக்கில்லை. வியாகரண சாஸ்த்ரத்தில் "லோபச் சாகல்யஸ்ய" என்றாற்போன்ற சில ஸூத்ரங்களுண்டு. அந்த சாகல்யர் யார்? எங்கேயிருக்கிறார்? என்று விசாரிப்பாரில்லை. ப்ரஹ்ம ஸூத்ரத்திலும் ஆச்மரத்யர் சொன்னார், ஔடுலோமியுரைத்தார், காசக்ருத்ஸ்நர் கூறினார் என்று சில ஸூத்ரங்களில் சொல்லப் படுகிறது. அவர்கள் எங்கிருக்கிறார்கள்? எங்கே இங்ஙனம் சொல்லியிருக்கிறார்கள்? என்று விசாரிப்பாருமில்லை. எதனாலே? விஷயத்தில் மட்டும் நோக்காகையினாலே.

4. ப்ரகிருதத்தில் * செய்யதாமரைத்தாளிணை வாழியே * இத்யாதியான மணவாள மாமுனிகள் வாழிதிருநாமத்தை விமர்சிப்பதாக வியாஜங் கொண்டு ஆசார்ய ஸார்வ பௌமரின்மேல் அநுவதிக்கவும் தகாத தூஷணைகளைப் பொழிந்திருக்கிறது. 1, 2, 3 என்று 10 வரை லக்கமிட்டு எல்லாம் நிந்தையாக முடித்திருக்கிறது. எம்பெருமானிடத்திலோ, ஆசாரியரிடத்திலோ அபசாரப்படுவது இரண்டுபடி. விபவகாலத்துச் செய்திகளைக்கொண்டு

அபசாரப்படுவது (அதாவது, அவர்கள் ஜீவதசையோடு வாழ்ந்த காலத்து வ்ருத்தாந்தங்களை மனம் போனபடி சொல்லி அபசாரப்படுவது) ஒன்று. இப்போது அர்ச்சாவதாரமாக எழுந்தருளியிருக்குமிருப்பிலே அபசாரப்படுவது மற்றொன்று. வேதாந்த வாசிரியர் "நிரவதிகுணக்ராமே ராமே" என்று தொடங்கும் சுலோகத்தில் "வரதநு ஹதிம் வாலி த்ரோஹம் மநாகபஸர்ப்பணம்" இத்யாதியாலே விபவாவதாரத்தில் அபசாரப்படும் வகையை நன்கு நிரூபித்திருக்கிறார். அர்ச்சாவதாரத்தில் அபசாரப்படும் வகைக்கு நாம் ஒரு ப்ரமாணம் காட்டவேண்டிய அவசியமில்லையே. மணவாளமாமுனிகளின் அர்ச்சையில் அபசாரப்பட்டுப் பேறு பெற்றவர்களின் ஜாபிதா 9-3-60ல் வெளிவந்த ஸ்ரீரங்கஸ்ரீர்நித்யஸ்ரீ: என்னும் நூலில் (பக்கம் 7, 8, 9களில்) 22 to 27 பாராக்களில் விரிவாக நிரூபிக்கப்பட்டுளது.

5. இப்போது நாம் மேலே குறிப்பிட்ட வாழித்திருநாம விமர்சனக் காகிதத்தில் விபவ மணவாளமாமுனிகளிடத்து அபசாரப்பட்டிருப்பது அளவுகடந்துள்ளது. 'அவரவர்களின் படிப்புக்குத் தக்கபடிதானே சொற்கள் வெளிப்படும்' என்னு முண்மையையுணர்ந்த நாம் இதில் ஸமாஹிதர்களே யாவோம். இராவணன் ஸீதாபிராட்டியை யபஹரித்தானென்பதற்காக பெருமாளுடைய வகுப்பினர் மந்தோதரியை யபஹரிக்கவோ பங்கப்படுத்தவோ மனங்கொண்டதில்லை. பிறர் வழிதவறிச் சென்றாலும் நாம் நேர்வழியிலே நின்று விஷயங்களையே விளம்புவோம். ஒருகாலும் வீணான நிந்தைகளில் கைவைக்கமாட்டோம்.

6. இப்போது மணவாளமாமுனிகளின் நிந்தைக்கு என்ன ப்ரஸக்தியென்றால் அஃது உரைக்கக் கேண்மின்;—எதிர்த்தரப்பில் ஏற்பட்டுள்ள கற்பனைகளையெல்லாம் நாம் (P.B.A.) அலசியலசி எடுத்துக்காட்டிப் பல புத்தகங்கள் எழுதி வெளியிட்டோம். அவற்றை இவர்கள் பலகாலம் பாராததுபோலவே பாவனை செய்து வந்தார்கள். இன்னமும் அப்படியேயிருந்துவிட்டால் க்ஷேமமேயாகும். அப்படியிருக்க முடியாமல் ஏதாவது எதிர்மூச்சு போட்டுக்கொண்டிருக்கவேணுமென்று இவர்களுக்குத் தோன்றியதனால் விஷயங்களில் அணுவளவும் வாய் திறக்க முடியாமையாலே நம்பிள்ளை பிள்ளைலோகாசாரியர் முதலான ஆசாரியர்களை தூஷித்தும், மற்றும் காசுக்குமுதவாத வம்புவிஷயங்களை நிரப்பியும் ஊர்பேரில்லாமல் நித்தியம் ஒரு துண்டுக்காகிதமாகப் பிரசுரம் செய்துவந்தார்கள். பிறகு விஷயத்தில் பேசியே தீரவேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதனால் D. T. தாதாசாரியார் என்பவரையும் ஈகை வேதாந்த தேசிகாசாரியார் என்பவரையும் அணுகி அவர்களைக் கட்டாயப்படுத்தி அவ்விருவர் பெயராலும் இரு சிறு நூல்களை வெளியிடுவித்தார்கள். அவை அடுத்த நாளிலேயே முடிந்து போனதனால் ஒருவழியும் தோன்றாமல் 'மணவாளமாமுனிகளை ஆசைதீர நிந்திப்பதுதான் கைகண்ட ஔஷதம்' என்று முடித்து அதிலே கை வைத்தார்கள். அதனாலென்ன?

7. நிந்தைகளின் நடுவிலே ஏதோ விஷயமும் தெரிவிப்பதுபோல் சிலவற்றை எழுதியிருப்பதால், அவற்றுக்கு பதில் சொல்லாமல் நம் கண் உறங்காதாதலால் அந்த பதில்களை முன்னம் தெரிவிக்கிறோம். இவர்களின் மதத்திற்போலே நம் மதத்திலும் விஷய தார்ப்பிக்ஷம் இருக்குமானால் நாமும் இவர்களைப்போலே நிந்திக்கத் தொடங்கவேண்டியதாகும். அந்த தார்ப்பிக்ஷம் நமக்கு ஏழேழ் பிறப்பிலும் நேராது. ஆகவே இவர்களையும் நிந்திக்க நினையோம்; இவர்கள் கொண்டாடும் ஆசார்யர்களையும் நிந்திக்க நினையோம். இத்தகைய விவாதத்தில் நாம் செய்யவேண்டிய காரியம் இரண்டு. (1) நமது ஸம்பிரதாயத்தில் இவர்கள் கூறும்

குற்றங் குறைகளை லவலேசமும் விடாமல் களைந்தொழிப்பது ஒன்று. (2) இவர்கள் பக்க லில் நாம் பல்லாண்டுகளாக நிரூபித்து வருகிற குற்றங்குறைகளை எள்ளளவும் அசைக்க வொண்ணாதபடி ஸ்தாபிப்பது மற்றொன்று. இவ்விரண்டும் முக்கியமானவை.

## — இங்கு மிக முக்கியமான ஒரு விஷயம். —

8. நம்முடைய எழுதுகோல் இவர்களுடைய நூதன ஸ்ருஷ்டிகளில் மட்டும் வியாபரிப்பதேயொழிய ஸ்ரீவைஷ்ணவாசார்ய ஸார்வபௌமரான வேதாந்தவாசிரியர்மீது லவலேசமும் வியாபரிப்பதன்று. இவர்கள் சில பாமரர்களை வஞ்சிப்பதற்காக ' P. B. A. அநியாயமாய் தேசிகனை தூஷிக்கிறார்' என்று மருளச் செய்வதுண்டு. அது அபத்தம்! அஸம்பத்தம்!! அத்யந்தம் அஸம்பத்தம். ப்ரக்ருத விவாதங்களில் வேதாந்த தேசிகன் மீது அவத்யாரோபணம் செய்வதற்கு அவகாசலேசமும் கிடையாதென்பதைத் திண்ணமாகவெண்ணுக.

## — செய்யதாமரையித்யாதி வாழிதிருநாமத்தில் இவர்கள் கூறுமவற்றுக்கு விடைகள் —

9. [சேலைவாழி திருநாபி வாழியே.] சேலையென்பதில் ஒரு தூஷணம்; திருநாபி யென்பதில் மற்றொரு தூஷணம். (1) மாதர்கள் அணிந்துகொள்ளும் ஆடைக்குத் தான் சேலையென்று பெயரென்றும், மாமுனிகளிடத்தில் அதை யெடுத்துரைத்து வாழ்த்துக் கூறியிருப்பது தவறென்றும் இவர்களுடைய எண்ணம். இது மிகத் தவறு. ஆடை சேலை கூறை புடைவை முதலான சொற்கள் பொதுவாக வஸ்த்ரஸாமான்யத்திற்குப் பெயர். "சேலை கட்டியமாதரை நம்பினால்" என்கிற வொரு விநோதப் பாட்டைக்கொண்டு இவர்கள் மருண்டனர். பிங்கலமுனிவர் இயற்றிய பிங்கலந்தை யென்கிற நிகண்டை யெடுத்துக் காணலாம். எந்த கோசத்தையு மெடுத்துக் காணலாம். அமரகோசாதிகளில் கொண்ட 'சேலம்' என்னும் வடசொல்தான் தமிழில் சேலை யென்றாயிற்று. சேலம் என்பதற்கு எது பொருளோ அதுதான் சேலையென்பதற்கும் பொருள். கூறை என்கிற சொல் உலகில் பெரும்பாலும் மாதர்களினுடைக்கு வழங்கி வருகிறது. எனினும் திருமங்கையாழ்வார் "கூறை சோறிவை தந்தெனக்கருளி அடியேனைப் பணியாண்டுகொளெந்தாய்" என்கிறார். "கூறை சோறிவை வேண்டுவதில்லை" "காசுங் கரையுடைக் கூறைக்கும்" என்கிறார் பெரியாழ்வார். சிற்றாடை என்கிற சொல் உலகில் சிறுபெண்களுக்கே உரியதாக வழங்குகிறது. யசோதை கண்ணனை நோக்கிக் கூறும் பாசுரமாகப் பெரியாழ்வாரருளிச் செய்கையில் "சிறுக்குட்டச் செங்கண்மாலே! சிற்றாடையும் சிறுப்பத்திரமும் இவை கட்டிலின்மேல் வைத்துப் போய்" என்றார். மேல்உத்தரீயமே இங்குச் சிற்றாடை யெனப்பட்டது. அப்பெரியாழ்வார் தாமே "செய்யநூலின் சிற்றாடை செப்பனுடுக்கவும் வல்லளல்லள்" என்று பெண்மகள் திறத்தும் பிரயோகித்திருக்கிறார். இங்ஙனே பலபல சொற்களெடுத்துக் காட்டுவோம். அது நிற்க. ஆக 'சேலைவாழி' என்றதில் ஒரு குறையுமில்லையென்க.

10. இனித் திருநாபியைப்பற்றிக் கேண்மின். "நாபியென்னுஞ் சொல் வடமொழியாக இருந்தாலும் திரு சேர்ந்ததால் அதைத் தென்மொழியாகக் கொள்க" என்றெழுதப் பட்டுள்ளது தூஷகரால். இஃது அர்த்தமில்லாத பேச்சு. இவர்களுடைய மருளை இங்கு நாம் அகற்றுவோம். ஸ்ரீ யென்கிற வடசொல்லையும், திரு என்கிற தமிழ்ச் சொல்லையும் கூட்ட வேண்டுமிடத்து ஒரு வியவஸ்தையுண்டு. அதை யறியாது யதேஷ்டமாகப் பிரயோகிப்பவர்

களை நாம் கண்டித்திருக்கிறேம். திரு என்பதை வடசொல்லோடு கூட்டலாகாதென்று இவ்வளவே நாம் சொல்லுவதாக இவர்கள் க்ரஹித்து, நாபியென்னும் வடசொல்லோடு திரு எப்படி கூடிற்று? திரு நாபியென்று எப்படிச் சொல்லலாம்? என்று க்ஷேபிக்கிற முறையில் இது எழுதப்பட்டிருக்கிறது. இது மிகவும் சோசநீயமான மருள். திரு நாமம், திருநாராயணன், திரு நக்ஷத்ரம், திரு விசாகம், திரு மூலம் இத்யாதிகளைத் தவருக ஒரு மூர்க்கனும் சொல்லான். இங்கு ஸாரமான விஷய மென்ன வென்றல்—ஜ, ஷ, ஸ, ஹ இத்யாதிகளான சில எழுத்துக்கள் ஸம்ஸ்க்ருதத்திற்கே அஸாதாரணமானவை. அந்த எழுத்துக்களை முதலிற்கொண்ட சொற்கள் பலவுண்டே. அச்சொற்களோடு திரு சேரலாகாதென்பது நியதி.

11. இவர்கள் கையாளும் வாக்கியங்களில் "திருஸுரபியானுலும் கோத்வம் கழியாதிறே" என்பதொன்று. நாம் கீழே விவரித்த நியதியின்படி ஸுரபியோடு திரு சேரத்தகாது. (ஸு) ஸம்ஸ்க்ருதத்திற்கே அஸாதாரணமாதலால். ஸுரபியைத் தமிழாக்கிக் கொள்ளவேணும். அப்போது அது சுரவி யென்ருகும். திருவிருத்தத்தில் * வால்வெண்ணிலவென்னும் பாசுரத்தில் 'சுரவி' யென்றே ப்ரயோகித்தாராழ்வார். அந்தச் சொல்லோடு (திரு) தாராளமாகச் சேரும். திருஸுரபியென்பது பிழை பிழையே. இது ப்ரயோக்தாவினுடைய தவறுதலன்று; கையாளுமிவர்களுடைய தவறே. இதை நாம் இன்று நேற்று எடுத்துக் காட்டவில்லை; 50 வருஷங்களுக்கு முன் காட்டினேம். பிறகு 'திருச்சுரபியானுலும்' என்று திருத்தியச்சிட்ட ரஹஸ்யத்ரயஸாரமிருக்கின்றதே. திருநாபியென்கிற சொல்லில் இந்த விசாரத்திற்கு ப்ரஸக்தி ஏது? பிள்ளைப் பெருமாள் திருவரங்கக்கலம்பகத்தில் * வாழும் மவுலித் துழாய் * என்று தொடங்கும் செய்யுளில் "தாழுமுளரித் திருநாபித் தடத்துளடங்கும்" என்றிருப்பது காண்க. ஒரு பாஷையையும் வரியடைவே கற்காத குற்றமன்ரே! நாம் செய்யும் ஆக்ஷேபமானுலும் ஸரி, நாம் சொல்லும் ஸமாதானமானுலும் ஸரி; ஆயிரவர் கூடினுலும் அசைக்கமுடியாதென்பது-சிலாசாசனமன்ரே?

12. ஞலபுண்ட்ரமோ சூர்ப்பபுண்ட்ரமோ எதுவும் இவர்களுக்கேயொழிய ஸத்ஸம்ப்ரதாய ஸாணியில் தலைகாட்டிற்றிலது. இது எனது நூல்களிலொன்ருன ஸத்ஸம்ப்ரதாய ஸாரநிதியின் முடிவில் விளக்கமாகக் காணத்தக்கது. அப்புத்தகம் 2 ரூ. விலைக்குக் கிடைக்கும்.

13. "அபரிமிதமான க்ரந்தங்களும் பாஷ்யங்களும் எழுதி தோள்கள் தினைத்திருப்பதால் தோளை வாழ்த்தியபடி" என்றெழுதியுள்ளது. இந்த பரிஹாஸத்திற்கு யதிராஜஸப்ததியில் பதிலுள்ளது. ஆதிசங்கராசார் அமிதமான நூல்களையெழுதினரென்றும் நம் உடையவர் மிதமான நூல்களை யெழுதினரென்றும் வேதாந்த வாசிரியரிடம் சிலர் வந்து கொக்கரிக்க, அதற்கு ஸாதித்தார் ஸப்ததியில்—"விகடி உஸரஹிதக்ஷ: வீசீவரிஷாஸணோதிதை: குஷிரிஷிதஷாஸாஹெஹாவீ கியாநிவ கௌஸுஹ: ?" என்று. இதன் கருத்தாவது, திருமாலின் திருமார்புக்கு அணியான ஸ்ரீ கௌஸ்துபமணியை ஒரு தட்டிலும் குலபர்வதங்களை மற்றொரு தட்டிலும் வைத்து நிறுத்துப் பாருங்கள்; பார்த்தால் மட்டியும் மசாணமுமான தட்டுதான் கனத்துத் தோன்றும், அதனுல் கௌஸ்துபத்திற்கு என்ன குறை? என்கை. 'எலிப்புழுக்கை எழு நூறு கலம்; கொசு மூத்திரம் குறுணி' என்னும்படியான நூல்களை மாமுனிகள் அருளிச் செய்யவில்லைதான். காஞ்சியில் அய்யா க்ருஷ்ணமாசாரியரென்றிருந்தவர் ரகுவீரகத்யத்திற்குத் தாம் வியாக்கியான மெழுதுவதாகத் தொடங்கி மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளை ப்ரரா பாராவாகக் களவாடிச்

சேர்த்து எழுதிவிட்டார். தெலுங்கு லிபியில் (நெல்லூரில்) அச்சிடவும் ஆரம்பித்துவிட்டார். வஸந்தோத்ஸவபங்களாவில் ஸபை கூட்டி ஸ்ரீமத் கம்பீரமாக வாசித்துக் காட்டுகையில் நான் உடனே ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலையைக் கொண்டுபோய்க்காட்டி அவருடைய கள்வத்தை ஸபையறியச் செய்தேன். தலைகுனிந்து எழுந்து சென்றார். அச்சிடப் பணம் கொடுப்பதாக வாக்தானம் செய்திருந்தவரும் கொடாதே போக அப்புத்தகம் அரை குறையாகவே நிற்பதை யாரே யறியாதார்? தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுது மொத்த மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தி ரத்நாகரத்தைக் காதால் கேட்கவும் பாக்யமற்ற கருவிலே திருவிலாதீர்! வாய் மூடி நிற்பதழகு. கை கன்னக்கோ லென்று இந்த தூஷகர்கள் எழுதியிருப்பது அந்த அய்யா க்ருஷ்ணமாசாருடைய கைக்குத் தகும்.

14. பொய்யிலாத மணவாள மாமுனி=திருமங்கையாழ்வார் திருவெவ்வுளூர்த் திருமொழியில் "பொய்யிலாதபொன்முடிகள்—எய்தவெந்தை" என்றார். தம்மை "பொய்ம்மொழியொன்றில்லாத மெய்ம்மையாளன்" என்றார். புள்ளம்பூதங்குடியைப் பொய்யா நாவின் மறையாளர் வாழுமிடமாகக் கூறினர். நம்மாழ்வார் திருவாய்மொழியைப் பொய்யில் பாடலென்றார். ஆசாரியர்களின் காலத்தில் * பொய்ம்மொழியொன்றில்லாத மெய்ம்மையாளர் மணவாளமாமுனிகளொருவரே. இதில் அஸூயைப்பட்டுச் சாகலாமிவர்கள்.

15. அடியார்கள் வாழ அரங்கநகர்வாழ=இதில் அரங்கனை வாழ்த்தவில்லை யென்று குறை கூறப்படுகிறது. "வாழி எதிராசன் வாசகத்தோர்" என்னுமிவர்கள் எதிராஜனுக்கு வாழ்த்துக் கூறவில்லையென்று குறை கூறலாகாதோ? "தொண்டைமண்டலவேதியர் வாழவே" என்று சொல்லி, அவர்கள் யாரென்ன, 'தூய தென்மறை வல்லவர் வாழவே' என்று தென்கலையார்களேயாக விவரித்தார் வேதாந்தவாசிரியர். மற்றொரு கலையாரை ஏன் வாழ்த்தவில்லையென்று அவரையே கேட்பது. பிசாசஸ்ய பிசாச பாஷா வக்தவ்யம்.

16. * செய்யதாமரை யித்யாதியாலே வடிவழகை வருணித்திருப்பது பற்றிய பரிஹாஸம்;—"ஆசாரியன் சிச்சனுருயிரைப் பேணுமவன், தேசாரும் சிச்சன் அவன் சீர்வடிவை ஆசையுடன் நோக்குமவன்." ஆகையாலே சிஷ்யர்களுக்கு ஆசார்ய திவ்யமங்கள விக்ரஹ மங்களா சாஸனமே தஞ்சம். இவர்களும் "தொண்டருக்கும் தணையடி வாழி........ வாழி நின்வடிவே" என்று * செய்யதாமரைப் பாசுரத்தையே காப்பியடித்திருக்கிறார்கள். வேதாந்தவாரியரும் "உபவீதிந ஊர்த்வபுண்ட்ரவந்தம்" இத்யாதியால் முப்புரி நூலழகு, திருமண் காப்பெழில், முக்கோல் பிடிக்கும் மாண்பு, சிகாபந்த ஸௌந்தர்யம் இவற்றையே போரப்பொலியப் புகழ்ந்து பேசினர் எதிராசர் பக்கலில்.

## — நிகமனம் —

ப்ரக்ருத விமர்சனத்தில், விஷயங்களில் நாம் தெளிவு பிறப்பிக்க வேண்டிய திவ்வளவே. மற்றுள்ள க்ரூர நிந்தைகளுக்கு "[illegible]"; இத்யாதி ஸங்கல்பஸூர்யோதய ஸூக்திஸ்மாரணமே அருமருந்து. * இஹைவபலமச்நுதே யாகும். முகப்பிலுள்ள சபதத்தை முடிவிலும் நினைப்பூட்டி நிற்கிறோம்.

---

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:

ஸ்ரீகாஞ்சீ P. B. அண்ணங்கராசாரியர் எழுதிய

# தேவப்பெருமாள் ஸன்னிதி ஸமாசாரம்

ஆதிகாலத்தில் தேவஸ்தானங்களெல்லாம் ஆங்காங்கு கலெக்டர்களின் கவனிப்பின்கீழ் நிர்வஹிக்கப்பட்டு வந்தன. A. D. பதினெட்டாவது நூற்றாண்டில் ஆங்காங்கு பிரமுகர்களாயிருந்த பெரியார்களிடத்தில் அனேக தேவஸ்தானங்கள் ஒப்படைக்கப்பட்டன. அந்த ஸந்தர்ப்பத்தில் ஸ்ரீகாஞ்சீ தேவராஜஸ்வாமி தேவஸ்தானம் அப்போது செல்வாக்குள்ளவராயிருந்த தாதாசார்ய குடும்பஸ்தரொருவரிடத்தில் ஒப்படைக்கப்பட்டதென்று சொல்லுவர்கள்.

கி. பி. 1842-ஆம் வருஷத்திலிருந்து 1907-ஆம் வருஷம் வரை (65 வருஷ காலம்) தாதாசார்ய வம்சஸ்தர்கள் தர்மகர்த்தாக்களாக இருந்தார்களென்றும், பிறகு ஸ்கீம்ஸூட் போடப்பட்டு கோவில் ஒரு ரிஸீவர் வசம் ஒப்புவிக்கப்பட்டதென்றும், அப்போது ஒருவிதமான முடிவு ஏற்பட்டதென்றும், மறுபடியும் ஸ்கீம்வழக்கு தொடுக்கப்பட்டு தேவஸ்தானம் மீண்டும் மற்றொரு ரிஸீவரிடம் ஒப்புவிக்கப்பட்டதென்றும், 1911-ம் ஷூ அந்த வழக்கு சென்னை ஹைகோர்ட்டில் முடிவுபெற்று வைஷ்ணவரல்லாதவொரு பிராமணர் நிர்வாஹ டிரஸ்டியாயிருக்கவேண்டுமென்று தீர்ந்ததென்றும், அது முதல் அவ்விதமாகவே நடந்து வருகிறதென்றும் வெகு சுருக்கமாகக் கொள்க.

புராதந தாதாசார்ய சரித்ரமென்றும் நூதந தாதாசார்ய சரித்ரமென்றும் இரு வகையான சரித்திரமுண்டு. என்னுடைய அநுபவத்திற்கு எட்டின சரித்திரங்கள் நூதந தாதாசார்ய சரித்திரமாகும். எனக்கு நேராகத் தெரியாமல் உண்மையான ரிகார்டுகளைக் கொண்டு தெரியவந்த சரித்திரங்கள் புராதந தாதாசார்ய சரித்திரமாகும். நூதந தாதாசார்ய சரித்ரத்தை முன்னம் எழுதுகிறேன். இந்த தேவஸ்தானத்தில் சிலகாலம் ஏகதேசமாக தர்மஹர்த்ரு பதவியை வஹித்து வந்த தாதாசார்ய வம்சஸ்
தர்கள் தர்ம பரிபாலனங்களை ஒழுங்குபாடாகச் செய்வதில்லையென்றும் அவர்களை
விலக்கி நியாயம் செலுத்தவேண்டுமென்றும் சுமார் ஐம்பது வருஷங்களுக்கு முன்
வியவஹாரம் (ஸ்கீம்கேஸ்) ஆரம்பமாயிற்று. இந்த ஸ்கீம்ஸூட் போட்டவர்கள் ஷை
தேவஸ்தானத்தில் கைங்கர்ய பரர்கள் பலர் எனினும் தென்கலையார்களே முக்கியமாக
நின்றார்கள். அப்போது தேவஸ்தான நிர்வாஹம் ஒரு ரிஸீவர் மூலமாக நடந்து
வந்தது. நல்ல புகழ்பெற்ற தோணுங்குளம் ராமாநுஜாசாரியரென்பவரே அப்போது
பல வருஷங்கள் ரிஸீவராயிருந்தவர். அந்த ஸ்கீம் வியாஜ்ஜியம் சென்னை ஹை
கோர்ட்டாரவர்களால் ஒருவாறு முடிவு செய்யப்பட்டது; தாதாசார்ய வம்சஸ்தர்களில்
ஐந்து பேர்கள் தர்மஹர்த்தாக்களாயிருக்கவேண்டுமென்றும் ஒவ்வொரு வருஷத்தில்
ஒவ்வொருவர் எக்ஸிக்யூடிவ் டிரஸ்டியாக இருந்து அதிகாரம் செலுத்தி வரவேண்டிய
தென்றும், இவர்கள் அநீதியாக நடந்துகொண்டால் அதைப் பரிசீலனை செய்து
நியாயம் செலுத்துவதற்காக இவர்களுக்கு மேல் ஒரு ட்ரஸ்டு போர்டு இருக்கவேண்டிய
தென்றும், அந்த ட்ரஸ்டு போர்டில் ஒரு தென்கலை ஸ்ரீ வைஷ்ணவர், (தாதாசார்ய
ரல்லாத) ஒரு வடகலை ஸ்ரீ வைஷ்ணவர், ஸ்ரீ வைஷ்ணவரல்லாத ஒரு ப்ராஹ்மணம்
ஆக மூவர் அதிகாரிகளாக இருந்து தணிக்கை செய்யவேண்டியதென்றும்; அவசியம்
நேருங்காலங்களில் இந்த ஸ்கீமை மாறுதல் (மாடிபிகேஷன்) செய்யலாமென்றும்
முடிக்கப்பட்டது. அவ்விதமாகவே சுமார் இருபது வருஷகாலம் நடந்து வந்தது.

அதிலும் தரும நிர்வாஹங்கள் மிகவும் சீர்கேடாகவேயிருந்ததனால் ஸ்கீம் மாடி
பிகேஷன் செய்யப்படவேணுமென்று மறுபடியும் தென்கலை வகுப்பினரால் வியாஜ்
ஜியம் தொடுக்கப்பட்டது. அப்போதும் ஐந்தாறு வருஷ காலம் ஷை தாதாசார்ய

வம்சஸ்த தர்மஹர்த்தாக்கள் விலக்கப்பட்டு ஸ்மார்த்த ப்ராஹ்மணரொருவர் ரெஸீவ ராக ஜில்லா கோர்ட்டாரால் நியமிக்கப்பெற்று தேவஸ்தான பரிபாலனம் நடந்து வந்தது. அந்த வியவஹாரமானது விசேஷபலனைப் பெறுவியாமலே முடிந்திட்டதனால் மறுபடியும் ஷை தாதாசார்ய வம்சஸ்தர்களே ஐந்து பேர்கள் தர்மஹர்த்தாக்களாக இருந்துவர நேர்ந்தது. வாதிகளான தென்கலையார்களால் சென்னை ஹைகோர்ட்டில் அப்பீல் செய்துகொள்ளப்பட்டிருந்தது. அந்த அப்பீல் 17—1—1941 தேதியில் கனம் ஜட்ஜ் வார்ட்ஸ்வொர்த் துரையவர்களாலும் ப்ரஹ்மஸ்ரீ கனம் ஜட்ஜ் பதஞ்சலி சாஸ்திரியவர்களாலும் பரிஷ்காரமாக முடிவு செய்யப்பட்டது.

கடைசியான முடிவு என்னவென்றால்; “ஸ்ரீ வைஷ்ணவரல்லாத ஒரு ப்ராஹ்மணர் (ஸ்மார்த்தர் அல்லது மாத்வர்) ஸர்வாதிகார ஸம்பந்நரான மேனேஜிங் டிரஸ்டியாக நூறு ரூபாய் சம்பளத்தில் நியமிக்கப்படவேண்டும். தேவஸ்தான ஸம்பந்தமான லௌகிக வைதிக ஸகல அதிகாரங்களும் அவரொருவர்க்கே அதீனம். தாதாசார்ய வம்சஸ்தர்களில் கிழண்டை வகுப்பிலும் மேலண்டை வகுப்பிலுமாக இரண்டு பேர்கள் ஒருவிதமான அதிகாரமுமின்றிக்கே நாமமாத்ரமான (ஹானரரி) டிரஸ்டிகளாக இருக்கவேண்டியது. மேனேஜிங் டிரஸ்டியின் நடவடிக்கைகளின் மீது தணிக்கை பார்க்கவேண்டிய அதிகாரம் முழுவதும் ரிலிஜியஸ் எண்டோமெண்டு போர்டைச் சேர்ந்தது. ஷை ஸ்கிம் கேஸ் அப்பீல் வாதிகளான ஸ்ரீ காஞ்சீ P. B. அண்ணங்கராசாரியர் ஆகிய அடியேன் முதலான ஏழு தென்கலையார்களுக்கு கோர்ட்டு காஸ்டு சுமார் ரூ. 450 வரையில் தேவஸ்தானத்திலிருந்து செலுத்தவேண்டியது” என்பது தீர்ப்பின் ஸாராம்சம். இது இப்படியே நிறைவேற்றப்பட்டது. ஷை தீர்ப்பை கோர்ட்டார் வெளியிட்டவளவில் அப்போது தர்மஹர்த்தாக்களாக இருந்து வந்த தாதாசாரியர்கள் “நாளது வைகாசி மாதத்தில் நடைபெற வேண்டிய ப்ரஹ்மோத்ஸவம் வரையில் நாங்களே யிருந்து அநுபவித்துவிட்டு உடனே விலகிப் போய் விடுகிறோம்; கோர்ட்டார் தயவு செய்து அந்தப்படிக்கு உத்தரவு அளிக்கவேணும்” என்று கேட்டுக் கொண்டார்கள். அதைக் கோர்ட்டார் சிறிதும் அநுமதிக்கவில்லை. “நாளது மார்ச்சு மாதம் 17வக்குள் இந்த ஆர்டர் ஆசாரத்திற்கு வரவேண்டியது அவசியம்” என்று முடிவு செய்ய, அப்படியே அன்றுமுதலாகவே ஆசாரத்திற்கு வந்து விட்டது.

பகவத் ஸந்நிதிகளில் தர்மகர்த்தாக்கள் என்கிற பதவி கிடைப்பது ஸாமான்யமல்ல; ஜந்மாந்தர ஸஹஸ்ரநற்றவப்பயன் என்னவேணும். அப்படி அலப்ய லாபமான பதவியைப்பெற்றவர்கள் உண்மையில் தர்மகர்த்தாக்களாகவே இருந்து வந்தால் ஒரு பங்கமுமடையாமல் நீடுழி வாழ்வர்களென்பதில் ஐயமில்லை. தர்மகர்த்தாக்களாக நியமிக்கப்பட்டு வந்து சேர்ந்த அன்றைக்கே தர்மஹர்த்தாக்களாகத் துணியுமவர்களைப் பற்றி நாம் தெரிவிக்கவேண்டியது என்ன இருக்கிறது? இந்த தேவஸ்தானமானது பலவகையிலும் ப்ரஸித்திபெற்றது. இதற்கு நிகரான திவ்ய தேசம் வேறொன்றில்லை. இப்படிப்பட்ட திவ்ய தேசத்தில் ஸ்ரீ வைஷ்ணவ ஆலயங்களுக்கு உரிய லக்ஷணங்கள் நெடுநாளாக மிகவும் பங்கமடைந்திருந்தன. ஆழ்வார்களுக்குத் திருநக்ஷத்திரங்கள் கொண்டாடுவதும், பகல் பத்து, இராப் பத்து என்கிற அத்யயனோத்ஸவத்தை விபவமாக நடத்துவதும் முதலியவை விஷ்ணுவாலயங்களுக்கு விசேஷ லக்ஷணங்கள் என்பது நாம் சொல்லவேண்டுமோ? ஆழ்வார்கள் இருக்குமிடம் தெரியாமல் மூலையிலொடுக்கிவைத்திட்டு, அவர்களுடைய ஸந்நிதிகளின் வாசல்களில் மண் சுவரெழுப்பி முள்ளடைத்து.............இப்படியாகச் செய்து வைத்திருந்தார்கள் முன்னே யிருந்த டிரஸ்டிகள். கோஷ்டியின் பெருமைகளோ, ஆழ்வாராசார்யோத்ஸவ பரிபாலன வைபவங்களோ எல்லாம் தென்கலை வகுப்பினருடையதாகவே யிருக்கின்றனவென்கிற நிர்வேதத்தினால் தேவாலய லக்ஷணங்களை யெல்லாம் சீர்குலைத்து நடத்தி வந்தார்கள். மணவாளமாமுனிகளில்லாமல் அத்யயனோத்ஸவம் நடத்தக்கூடாதென்கிற நியாயாலயத் தீர்ப்பு வலிதாக இருந்ததனாலே அறுபதெழுபது

வருஷ காலம் அத்யயனோத்ஸவத்தையே அடியோடு அடக்கியிருந்தார்கள். இப்படிப் பட்ட சில்விஷமங்களை யறியாதார் தென்னிந்தியாவில் துர்லபர்கள்.

இன்னமும் கேண்மின்; 1842-ஆம் வருஷத்தில் தாதாசாரியர்கள் இந்த தேவஸ்தான நிர்வாஹத்தை ஒப்புக்கொண்டபின் இரண்டு மூன்று வருஷகாலம் ஸாத்விகர்களாயிருந்தார்கள் போலும். பிறகு முதற்காரியம் ஆழ்வார்களின் ஸன்னிதிகளை யெல்லாம் பாழ்படுத்தியது. அதற்கடுத்த காரியம் நம்மாழ்வார் ஸன்னிதிக் காரர்களோடு வியாஜ்ஜியம் தொடங்கியது. [அது 1850-ஆம் வருஷத்தில்.] அது தான் தாதாசாரியர்கள் ஆரம்பித்த முதன் முதலான வியாஜ்ஜியம். "ஆழ்வாரைத் தொட்டுத் திருவாராதனம் செய்ய உங்களுக்கு அதிகாரமில்லை; நீங்கள் வெறும் பரிசாரகர்களே யொழிய அர்ச்சகர்களல்ல; தேவஸ்தான அர்ச்சகர்களே அங்கும் பூஜை செய்ய வேண்டும்" என்று வியாஜ்ஜியம் தொடங்கி ஆழ்வார் ஸன்னிதி திட்டங்களை யெல்லாம் நிறுத்தி மூன்று கோர்ட்டு வரை நீண்டகாலம் வழக்காடித் தோல்வி யடைந்து நின்றார்கள். பிறகு பல வருஷங்கள் கழித்து, அந்த ஆழ்வார் ஸன்னிதிக்காரர்களுள் ஒருவரான (Late) திருமணி ராகவாசாரிய ரென்பவரை வதம் செய்வதாகவும் துணிந்து, யானைக்கு மதம் பிடித்திருப்பதாக ஒரு பொய்யான ப்ரவாதத்தைக் கிளப்பி இரண்டு கோபுர வாசற்கதவுகளையும் பகலிலேயே அடைத்து, அந்த ராகவாசாரியர் ஆழ்வாருக்குக் காலைத் திருவாராதனம் செய்து கொண்டிருக்கையில் அவரை வெளியில்தள்ளிக் கைகால்களைக்கட்டி வாயிலும் துணியையடைத்து ஆழ்வார் மதுரகவிகள் நாத முனிகள் மூவரையும் திருமலைமேல் கொண்டு சேர்த்துத் திருமண் மாற்றுவதாக இருக்கையில் போலீஸ் ப்ரூந்தம் நூற்றுக்கணக்காக மலைமேல் வந்து சேர்ந்து பிறகு க்ரிமினல் கோர்ட்டுகளிலும் ஸிவில் கோர்ட்டுகளிலும் நடந்த நடவடிக்கைகள் பாரத ராமாயணாதிகளைப்போலே அச்சாகி யிருக்கின்றன வென்பதை உலகமறியும். இவற்றில் இவர்களுக்கு நேர்ந்த பராஜயங்கள் பேச்சுக்கு நிலமன்று.

## நம்மாழ்வார் சன்னிதியை வடகலையாக்க முயன்றபோது

## In the Court of the additional Dt. Munsiff of Chingleput.

O. S. Nos. 6 & 7 of 1912.

Present:—M. R. Ry. R. V. Krishna Ayyar M. A., B. L.,
Additional Dt. Munsiff.

Monday 31—8—1914.

Paras 106 to 113 களில் உள்ள விஷயம்.

"In this connection, the facts which immediately gave rise to and culminated in this litigation become pretty important. ................ ......The plaintiff's case is that at a time when the outer gates of the temple were closed for the purpose of restraining a temple elephant which had gone mad, the Vadagalais forcibly entered the suit shrine and carried away the Utsaver idols of Nammalwar and his attendants with a view to alter their namams. The defendants, on the otherhand state that in connection with Pagalpathu festival ........... it was usual to take Nammalwar idols up the hill every year and that it was in accordance with the custom and not for any sinister purpose that the idols were removed from the suit shrine...... The parties have consequently adduced a very considerable body of evidence in respect of the events of the 27th of December 1908 and the following days.

It appears to me to be unnecessary to discuss this evidence at length, and I will content myself with stating a few facts established by it.

There were immediately complaints by the plaintiffs to the Police and Magistrate against the Vadagalais whose motives were then and there attacked as improper. The police forthwith appeared on the scene with Sub-Inspector Neelakanta Iyer, P. W. I. at their head. Neelakanta Iyer discovered the idols in the uphill-shrine and on the same day drew up the mahazar, Exhibit A, in the presence of the Vadagalai Receiver and several others. In that mahazar, there is reference to the fact that, though the idols, for the time being, wore Vadagalai Namams yet, when washed out and inspected they contained doubtful Thengalai traces. As regards the Plaintiff's complaint to the Magistrate it ended in the conviction of several of the Vadagalais Exhibit N. One of the grounds on which the conviction was upheld on appeal was that the vehicle called Tholukkinian on which, if the idols had been removed in connection with the festival they must have been carried, was found on inspection to have been totally unused. Now all these facts, the immediacy of the Plaintiff's complaints, the alleged Thengalai traces on the idols, the unused character of the Tholukkinian greatly probablise the Plaintiff's version of a forcible removal.

Side by side with these facts there is also the incredibility of the justification attempted by the Defendants for the removal of the idols in question. From exibits L. EE GG. and RR. and from the oral evidence in the case it is clear, that, *for long years*, the Alwars and Acharyars have never taken part in the Pagalpattu festival at Conjeeveram As regards the suit year itself, the receiver had *admittedly* not given any permission to carry the idols up hill. It is therefore impossible to suppose that the Defendants' removal of the idols from the Nammalwar shrine was a bonafide act done in the ordinary course of the Pagalpathu festival

On 23—12—1908 the idols were restored to the suit shrine by an order of the stationary Sub-Magistrate of Conjeeveram.

But the police continued to guard the shrine until 6-1-1909. On that day, the shrine itself was handed over to the Plaintiffs and a mahazar, Exhibit T, was drawn up. In that mahazar it is stated that the Moolavar for the Nammazhwar had clearly visible Thenkalai Namam on his forehead, that Thenkalai Namams were also found on various articles and vessels within the shrine and on the Brindavanam opposite to it and that the namams on Mathurakavi and Nathamuni were not clearly visible. It is agreed, by the way, that Mathurakavi and Nathamuni could not have namams different from what Nammalwar wore.

.... .... ... .... .... .... ....

It is unnessary to discuss the Namam question further.

From all the facts and the circumstances of the case, it is conclusively established that the namams customarily worn by Nammalwar and his attendant deities were only Thengalai namams and not Vadagalai namams."

ஷை இங்கிலீஷ் ஜட்ஜ்மெண்டின் ஸாரமான கருத்து கீழ்வருமாறு:—

இந்த சந்தர்ப்பத்தில் இந்த வியாஜ்ஜியம் ஏற்பட்டதற்கு முன் நடந்த விஷயங்களைக் கவனிக்கவேண்டியது முக்கியமாகிறது. (தென்கலை) வாதிகளின் வழக்கு என்னவென்றால்:—"கோவிலின் யானைக்கு மதம்பிடி(ப்பி)த்து கோபுரவாசலின் களை மூடியிருந்தபோது வடகலையார்கள் பலவந்தமாக நம்மாழ்வார் சன்னிதிக்குள் நுழைந்து, திருமண்காப்புகளை மாற்றுவதற்காகவே நம்மாழ்வாருடையவும் அவருடன் சேர்ந்திருந்தவர்களுடையவுமான" (நாதமுனிகள் மதுரகவிகள்) விக்ரஹங்களை அப்புறப்படுத்திக் கொண்டு போய்விட்டார்கள். இதற்கு மாறாக பிரதிவாதிகள் (வடகலையார்) பகல் பத்து உத்ஸவம் நடத்துவதற்கே வழக்கம்போல் ஷை விக்ரஹங்களை ஏள்ளப்பண்ணிக்கொண்டு போனதாகச் சொல்லுகிறார்கள். இருதரத்தாரும் 27—12—1908ல் நடந்த சம்பவத்தைப்பற்றி அனேக சாக்ஷியங்களையும் ரிகார்டுகளையும் கொடுத்திருக்கிறார்கள். இவைகளால் ருஜுவான விஷயங்கள் கீழ்வருமவை:— அன்றைய தினம் உடனே போலீஸாரிடத்திலும் மாஜிஸ்ட்ரேட் முன்னிலையிலும் வடகலையாரின் பேரில் பிராதுகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சப் இன்ஸ்பெக்டர் நீலகண்டய்யர் உடனே சில போலீஸார்களுடன் கலகம் நேர்ந்தவிடத்திற்குச் சென்றிருக்கிறார். நீலகண்டய்யர் பிரஸ்தாப விக்ரஹங்களை ஷை தேவஸ்தானத்தின் மலைமேல் கண்டு பிடித்தார். உடனே ஒரு மஹஜர் (exhibit A.) வடகலை ரெஸீவர் (தோ. ரா.), சில பிரமுகர்கள்முன்பாக தயார் செய்தார். அந்த மஹஜரில் அந்தசமயம் தற்காலிகமாக பிரஸ்தாப விக்ரஹங்களில் வடகலை நாமம் சாற்றப்பட்டிருந்தாலும் விக்ரஹங்களை அலம்பிப் பரிசோதித்தபோது தென்கலையென்று சந்தேஹிக்கக் கூடிய சின்னங்களிருந்தனவென்று எழுதப்பட்டிருக்கிறது. இந்த கேஸில் அனேக வடகலையார்கள் தண்டிக்கப்பட்டிருக்கிறார்கள். இது அப்பீலிலும் காயமானதற்கு முக்கியமான காரணம் என்னவென்றால், ப்ரஸ்தாப விக்ரஹங்களை ஏள்ளப்பண்ணிக்கொண்டு போவதற்காக உபயோகிக்கப்பட்டதாய்க் காட்டப்பட்ட தோளுக்கினியான் வெகுநாட்களாய் உபயோகப்படுத்தாமலிருந்ததாக நிரூபிக்கப்பட்டதும், உடனுக்குடனே பிராது கொடுக்கப்பட்டதும் தென்கலை சின்னங்கள் காணப்பட்டதுமாம். இவைபோன்றவைகளைக் கவனித்தால் பலவந்தமாக ஷை விக்ஹரங்களை அபஹரித்ததாகவே கொள்ளவேண்டியிருக்கிறது. இந்த விஷயங்களோடு இதையும் கவனிக்கவேண்டும். Exhibit L. EE, GG, and RR. இந்த ரிகார்டுகளிலிருந்தும் வாக்குமூலங்களிலிருந்தும் ஆழ்வார் ஆசாரியர்களின் பகல் பத்து உத்ஸவம் அனேக வருஷங்களாக நிறுத்தப்பட்டிருந்தது ஏற்படும்; ப்ரஸ்தாப வருஷத்திலேயும் விக்ரஹங்களைக் கொண்டுபோய் பகல்பத்து உத்ஸவத்தை நடத்தும்படி உத்தரவிடவில்லையென்றே ரிஸீவர் ஒப்புக்கொண்டிருக்கிறார். ஆகையால் பகல் பத்து உத்ஸவத்திற்கு இந்த விக்ரஹங்களைக் கொண்டுபோனதாகச் சொல்வது அடியோடு நம்பமுடியாது. காஞ்சீபுரம் ஸ்டேஷனரி சப்மேஜிஸ்ட்ரேட்டின் உத்தரவின் பேரில் 28—12—1.08ல் அந்த விக்ரஹங்கள் நம்மாழ்வார் ஸன்னிதிக்கே திரும்பக் கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்டிருக்கின்றன; ஷை ஸன்னிதியைப் போலீஸார் 6—1—1909 வரையில் பாராபோட்டு காத்துக்கொண்டிருந்தார்கள். அன்றையதினம் வாதிகளிடம் ஷை ஸன்னிதி ஒப்புவிக்கப்பட்டபோது ஒரு மஹஜர் தயார் செய்யப்பட்டது. அந்த மஹஜரில் நம்மாழ்வாரின் மூலவருக்குத தென்கலைத் திருமண்காப்பே வெகு ஸ்பஷ்டமாகப் பார்க்கலாம்படி இடப்பட்டிருந்ததென்றும், மற்றும் பாத்திரங்கள், சாமான்கள் முதலியவற்றில் தென்கலை நாமங்களே இருந்தனவென்றும், ஆழ்வார் ஸன்னிதியிலுள்ள (கருங்கல்) ப்ருந்தாவனத்தில் தென்கலைத் திருமண்காப்பேயிருந்ததென்றும் கூறப்பட்டிருக்கிறது.

இதற்குமேல் இந்த நாம விஷயத்தைப்பற்றி விவரிப்பது அனாவசியம். நடந்த விஷயங்களையும் சூழ்நிலைகளையும் கொண்டு நம்மாழ்வாரும் அவரைச்சேர்ந்த விக்ரஹங்

களும் தொன்றுதொட்டுள்ள ஆசாரப்படி தென்கலையே என்பது முடிவாக நிர்ண யிக்கப்பட்டு விட்டது. இவை வடகலை யல்ல.

ஆழ்வாராசாரியர்களின் பகல்பத்து உத்ஸவாதிகளையும் புறப்பாட்டு உத்ஸவங் களையும் வடகலை தாதாசார்ய தர்மகர்த்தாக்கள் நிறுத்தியகாரணம் S. A. Nos. 137, 133 and 2·9 of ·902 (on the file of the High Court ல் T. M. ஸ்வாமிநாத அய்யர் நிர்ணயம் (finding) பாரா 17ல் கூறியுள்ளது யாதென்றால், ஆழ்வாராசாரிய விக்ர ஹங்களுக்கு புறப்பாடு உத்ஸவம் நடத்தி மணவாளமாமுனிகளுக்கு உத்ஸவம் நடத்தா விட்டால் விரோதமாகவும் சங்கடமாகவும் இருக்குமே என்ற காரணத்தைக்கொண்டே எல்லா பக்த விக்ரஹங்களுக்குமே ஷை உத்ஸவத்தை இக்கோவிலில் நடத்துவதை நிறுத்திவிட்டார்கள். ("It is also clear that seeing how strange and unsound the theory that Manavala Mahamuni is not entitled to any procession will look when the other Alwars and Acharyas has such processions. The plaintiffs (Vadagalai Thathachar trustees) have evidently thought it best to stop such processions to all for the present" இது ஹைகோர்ட்டில் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது.

## தேவராஜஸ்வாமி சன்னிதியிலுள்ள தென்கலை பாத்யதைகள் விஷயம்

## IN THE HIGH COURT OF MADRAS.

### A. S. No. 212 of 1909.

### JUDGMENT 26-4-1912.

by Hon'ble Mr. Justice Abdur Rahim &
" " " Sundara Iyer.

பதினோராவது பேஜில் இரண்டாவது பாராவில் கூறியுள்ளவை :—

"We are, however of opinion that, having regard to the past management of the temple, it is desirable to provide some authority to supervise the administration by the trustees Several members of the Thengalai community hold offices in the temple, and the Thengalai, as a body, have important interests connected with it. It has been decided that the invocation before the recitation of the Prabandam or Thirvoimozhi in the temple should be addressed to the Thengalai Saint, Manavala Mahamuni. The Thengalais possess the right to the Adhyapakam office. These rights led to long litigation between the Thengalai and Vedagalai communities (see Krishnaswami Thathachariar v. Krishnamachar 1. L. R. 5 Madras 3·3). There is a shrine of Manavalamahamuni whithin the precints of the temple as well as a shrine of Nathamuni, ..............., The Thengalai own the right to a good proportion of the Thirtam offices Many of the Namams in the temple are Thengrlai namams. The Thengalais have also the right of Asirvadam and a Thengalai is entitled to the office of Mulji Dharmakarta. All these have led to constant disputes and litigation between the communities and it is complained with reason that the fact that all the trustees are Vadagalais has tended to impede the vindication of the rights of the Thengalais and the Thengali office holders. ... ... ... ... ... ...

It is also urged that the Thathachar Dharmakartas have repeatedly attempted to introduce invations contrary to the interests of the Thengalais. They attempted to introduce and idol of Thathachar but the attempt failed. ... ... ... ... ...

We have therefore considered it desirable, in appointing a Board of Supervision, to provide that one of the members of the Board should be a Thengalai gentleman not holding any office in the temple."

இதனுடைய ஸாராம்சம் வருமாறு :—(தமிழ் மொழிபெயர்ப்பு.)

முதலில் தோன்றிய ஸ்கீம்ஸூட்டை முடிவு செய்த ஹைகோர்ட்டு ஜட்ஜுகளான (கனம்) அப்துல் ரஹிம் & ஸுந்தரமையர் இவர்கள் எழுதியிருப்பது—

"தென்கலையாருக்கு அநேக முக்கியமான பாத்யதைகள் ஷை தேவஸ்தானத்தில் இருக்கின்றன. திருவாய்மொழி முதலிய ப்ரபந்தங்கள் தொடங்கும்போது தென்கலையாசார்யராகிய மணவாளமாமுனிகளின் தனியனைச் சொல்லியே எப்போதும் தொடங்கவேண்டியதென்று கோர்ட்டுகளில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அத்யாபக ஆபீஸ் தென்கலையார்களுடையதே. தேவஸ்தானத்திற்குள்ளேயே தென்கலை ஆசார்யர்களான மணவாளமாமுனிகளின் ஸன்னிதியும் நம்மாழ்வார் ஸ்ரீமன் நாதமுனிகளின் ஸன்னிதியும் இருக்கின்றன. தீர்த்த மிராசு பாத்யதைகளில் ஒரு பெரும்பாகம் தென்கலையார்களுடையதே. ஷை தேவஸ்தானத்திற்குள்ளிருக்கும் திருமண்களில் அனேகம் தென்கலை திருமண்காப்புகள் உள்ளன. அநேக தென்கலையாருக்கு ஆசீர்வாத பாத்யதைகளும் உண்டு. மல்ஜி தர்மகர்த்ருத்வம் ஒரு தென்கலை ஸம்ப்ரதாயஸ்தரையே சேர்ந்தது தென்கலையாருக்கு இவ்வளவு பாத்யதைகள் ஷை தேவஸ்தானத்தில் இருப்பதாலும் தர்மகர்த்தாக்கள் எல்லாரும் வடகலையாயிருப்பதாலும் தென்கலையார்கள் தங்களுடைய பாத்யதைகளைச் சரிவர அனுபவிக்கமுடியாமல் இருக்கும்படி தடைசெய்யப்படுகிறார்கள் என்று தகுந்த காரணத்துடன் நிரூபணத்துடன் குறை கூறப்படுகிறது. இது அநேக கிளர்ச்சிகளுக்கும் கோர்ட்டு விவகாரங்களுக்கும் இடம் தந்திருக்கிறது. தென்கலையார்களின் பாத்யதைகளுக்கு விரோதமாக அனேக புதிய ஆசாரங்களை வடகலை தாதாசார்ய தர்மகர்த்தாக்கள் நுழைக்க அடிக்கடி முயற்சி செய்கிறார்களென்று வற்புறுத்தப்படுகிறது. ஒரு தாதாசார்ய விக்ரஹத்தை புதியதாய் கோவிலில் ஸ்தாபிக்கச் செய்த முயற்சி பலிக்கவில்லை. இக்காரணங்களைக் கொண்டு தாதாசார்ய தர்மகர்த்தாக்களுக்குமேல் நாங்கள் ஏற்படுத்தவிருக்கும் Board of Supervisionல் ஒரு தென்கலை சம்ப்ரதாயஸ்தர் இருக்கவேண்டுமென்று கருதி அப்படியே தீர்மானித்திருக்கிறோம்".

கனம் ஹைகோர்ட் ஜட்ஜ்கள் இந்த தேவஸ்தான ரிகார்டுகளை யெல்லாம் ஆர அமரப் பரிசீலனை செய்தே மேலே குறித்த வாசகங்களை எழுதியுள்ளார்கள். அவர்கள் எழுதியிருக்கிற விஷயங்களெல்லாம் நடைமுறையில் நன்கு காண்பவையே. "தீர்த்த மிராசு பாத்யதைகளில் பெரும்பாகம் தென்கலையாருடையதே" என்றதில் ஐயமுண்டோ? பிற்காலத்தில் கலாவிபர்யயமடைந்த தாதாசாரியர்கள் தவிர மற்ற ஸகல தீர்த்தக்காரர்களும் தென்கலையார்களே. மலையாளநாச்சியார் ஸன்னிதிக்கு எதிரில் திருமலை ப்ராகாரத்தில் ஒரு கல்வெட்டு இருப்பதை நாளைக்கும் யாவரும் எளிதில் காணலாம்; அதாவது, வாதிபீகர ரக்ஷாசக்ரம் என்று மகுடம் கொடுத்து பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீரங்காசாரியர்க்கு முதல் தீர்த்த அருளப்பாடு என்று ஸ்பஷ்டமான எழுத்திலுள்ளது. இது உயரத்திலில்லை. தரையில் நின்றுகொண்டு சுகமாக் வாசிக்கலாம். இது கோர்ட்டு தஸ்தாவேஜுகளில் ஏறியிருப்பதால் இதை யழிக்க முடியாது.

மேலே குறித்த கனம் ஹைகோர்ட்டு ஜட்ஜுகளின் தீர்ப்பில் அடுத்த வாக்கியம் என்னவென்றால் "ஷை தேவஸ்தானத்திற்குள்ளிருக்கும் திருமண்களில்

அனேகம் தென்கலைத் திருமண்காப்புகள் உள்ளன" என்பதே. அந்த தாவாவில் எக்ஸிபிட்டாக தாக்கல் செய்யப்பட்ட திருமண் ரிகார்டுகள் பலவற்றையும் ஜட்ஜ்கள் பரிசீலனை செய்தே இவ்வண்ணம் எழுதியிருக்கிறார்கள். இதைப்பற்றின தத்துவங்களை இப்போது நாம் விவரிப்பதில் பலன் இல்லையாயினும் பழைய வரலாறுகளைப் பிராமாணிகர்கள் தெரிந்துகொள்ள இது மிகவுமுதவும்.

"தேவராஜஸ்வாமி தேவஸ்தானம் வடகலை" என்று கோவிலில் சில விடங்களில் தெருமண்ணாலும் சிமைச்சுண்ணாம்பாலும் வர்ணத்தாலும் எழுதியிருப்பதுண்டு. உலகில் வடகலைக்கோவில், தென்கலைக்கோவில் என்று வழங்கி வருவதானது எதைக் கொண்டு என்பதை விமர்சிக்கவேண்டும். கலை என்கிற சொல்லுக்கும் புண்ட்ரத்திற்கும். யாதொரு ஸம்பந்தமும் கிடையாது. ஆனாலும் ஒரு ரூடியான வ்யவஹாரம் நிகழ்ந்துவருவதால் அதையொட்டிப் பேசுவோம். இங்கு மதிள்களிலும் சுவர்களிலும் தூண்களிலும் வடகலை நாமங்களைப் போட்டிருப்பதால் இது வடகலை தேவஸ்தானமேயென்பதில் என்ன தடையென்று பலர் நினைக்கலாம். தேவப்பெருமாள் மூலவர் திருநெற்றியிலும் சில வாஹனங்களிலும் இந்த புண்ட்ரம் ஏறியிருப்பதால் இதைப்பற்றின தத்துவங்களை உலகம் தெரிந்துகொள்ளவேண்டியது மிக அவசியமென்று கருதி ரிகார்டுகளின் வழியைச் சிறிதும் மீறாமல் அதையொட்டியே சரித்திரங்கள் தெரிவிக்கிறோம்

இங்கிருந்த தென்கலைத் திருமண்களையெல்லாம் ஒவ்வொன்றாக மாற்ற ஆரம்பம் செய்தார்கள். தென்கலையார் நீதிமன்றங்களில் முறையிட்டுக்கொண்டதன்மேல் வடகலையாக்கப்படாத தென்கலைத்திருமண்களுக்கு கோர்ட்டுமனிதர்களே நேரில் வந்து லிஸ்டு எடுத்தார்கள். அப்போது, தேவப்பெருமாள் மூலவர்க்கு மாத்திரம் திருமண் மாற்றப்பட்டுப் போயிற்றென்றும் மற்ற பல விடங்களில் பழையபடியே யிருந்தனவென்றும் கண்டு 42 தென்கலைத் திருமண்களுக்கு ஜாபிதா எடுக்கப்பட்டது. மற்றொரு அதிகாரி வந்து இன்னமும் சோதனைகள் செய்து 18 தென்கலைத் திருமண்களுக்கு ஜாபிதா எடுத்தாராம். அப்போது மதவிஷயத்தில் ஸர்க்கார் பிரவேசிப்பதில்லையென்று இருந்தபடியால் மாற்றப்பட்டுப்போன திருமண்களை புநராவாஹநம் செய்விக்க முடியாமற் போயிற்று. அதனாலென்ன? மற்ற திவ்ய தேசங்களிற்போல் இந்த தேவஸ்தானத்திலும் புராதனமாக தென்கலைத் திருமண்காப்புகளே திகழ்ந்துவந்தன வென்பது ரிகார்டுகளினால் தேறியிருக்கிறது. அந்த ரிகார்டுகளெல்லாம் ஸ்கீம் ஸூட்டில் தாக்கல் செய்யப்பட்டபடியால்தான் கனம் அப்துல்ரஹிம் & ஸுந்தரமையரவர்கள் எழுதிய (டி ஸூட்) ஜட்ஜ்மெண்டில் "டி தேவஸ்தானத்திற்குள்ளிருக்கும் திருமண்களில் அனேகம் தென்கலைத் திருமண்கள் இருக்கின்றன" என்றும் "தென்கலையார்களின் பாத்யதைகளுக்கு விரோதமாக அனேக புதிய ஆசாரங்களை வடகலை தாதாசார்ய தர்மகர்த்தாக்கள் நுழைக்க அடிக்கடி முயற்சி செய்கிறார்கள்" என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

பெருமாளுக்கு தினப்படியாக உபயோகப்பட்டுவருகிற கடதீபத்திலும் தீர்த்தக் குடங்கள்மூன்றிலும் தென்கலைத் திருமண்காப்பே காணலாம். வைசாகோத்ஸவத்தில் இரண்டு வேளையும் மண்டபப்படிகண்டருளும் கங்கைகொண்டான் மண்டபத்திலும் தென்கலைத்திருமண்காப்புதான் விளங்குகின்றது. வாஹனங்களில் யாளி வாஹனம்; மணிகளில் பெரியதிருமணி; அபிஷேகமண்டபக் கொடுங்கைத்திருமண், தாயார்ஸன்னிதி முன்மண்டபத் திருமண், நூற்றுக்கால் மண்டபத்தில் கூர்மத்திற்கும் மேலே நான்கு கருடாழ்வார்களுக்கும் திருமண், யானைக்குத்திருமண், பல ஆழ்வாராசாரியர்கட்குத் திருமண் என்றிப்படி அநேக திருமண்கள் தீர்ப்புப் பெற்றவை. சில திருமண்காப்புகளுக்கு ஆப்டோன் ப்ளாக்கெடுத்து 'வரதன் ஸன்னிதிவரலாறு' என்னும் நூலில் வெளியிட்டிருக்கிறேன். இவற்றால் இப்போது ஸாத்யாம்சம் ஒன்றுமில்லையெனினும், கக்ஷிகளில் கலந்துகொள்ளாத மத்யஸ்தர்கள் உண்மையைத் தெரிந்துகொள்வார்கள்.

ஸ்ரீகாஞ்சீ P. B. அண்ணங்கராசார்ய வெயிளிட்ட
சார்வரிஸு வைகாசிமீ முதல் பங்குனி முடிய ஸ்ரீகாஞ்சீ மஹோத்ஸவக்
குறிப்பும் ஆழ்வாராசார்ய திருநக்ஷத்ராதி விசேஷங்களும்.

# பக்த ஹஸ்தபூஷணம்

### சார்வரிஸு வைகாசிமீ

| | | |
|---|---|---|
| 14...5...60 | ச. | மாதப் பிறப்பு திருமூலம் |
| 17...5...60 | செ. | திருவோணம் |
| 20...5...60 | வெ. | கடை வெள்ளிக் கிழமை |
| 23...5...60 முதல் 29...5...60 வரை | தி. – ஞா. | வஸந்தோத்ஸவம் |
| 29...5...60 முதல் 7...6...60 வரை | ஞா. – செ. | நம்மாழ்வாருத்ஸவம் |
| 2...6...60 வி.முதல் 17...6...60 வரை | | வைசாகப்ரஹ்மோத்ஸவம் |
| 2...6...60 | வி. | செல்வருத்ஸவம் |
| 3...6...60 | வெ. | அங்குரார்ப்பணம் |
| 4...6...60 | ச. | ஆழ்வார்திருநாள் |
| 5...6...60 | ஞா. | த்வஜாரோஹணம் |
| 7...6...60 | செ. | பெரிய திருவடி |
| 10...6...60 | வெ. | திருமூலத்திருவோலக்கம் |
| 11...6...60 | ச. | திருத்தேர் |
| 13...6...60 | தி. | அவபிரதம். |

### சார்வரிஸு ஆனிமீ

| | | |
|---|---|---|
| 14...6...60 | செ. | வைசாகோத்ஸவ ஸப்தாவரணம் |
| 17...6...60 | வெ. | பூப்பல்லக்கு |
| 19...6...60 | ஞா. | ஏகாதசி |
| 24...6...60 | வெ. | அமா. (இரட்) |
| 25...6...60 ச. முதல் 4...7...60 தி.வரை | | பெரியாழ்வார்க்கும் வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கும் உத்ஸவம் |
| 4...7...60 | தி. | ஆனி கருடன் |
| 23...6...60 | வி. | அமாதர்ப்பணம் |
| 27...6...60 தி.முதல் 3...7...60 ஞா.வரை | | கோடையுத்ஸவம் |
| 5...7...60 | செ. | ஏகாதசி திருவிசாகம் |
| 6...7...60 | பு. | ஸ்ரீமந்நாத முனிகள் |
| 8...7...60 | வெ. | பௌர்ணமி திருமூலம் |
| 10...7...60 | ஞா. | ஜ்யேஷ்டாபிஷேகம் |

### சார்வரிஸு ஆடிமீ

| | | |
|---|---|---|
| 16...7...60 | ச. | கர்க்கட ஸங்க்ரமணதர்ப்பணம் |
| 23...7...60 | ச. | அமாதர்ப்பணம் |
| 6...8...60 | ச. | ஆளவந்தார் யஜுருபாகர்மம் |
| 7...8...60 | ஞா. | கஜேந்திரமோக்ஷம்; திருவோணம் |
| 18...7...60 to 27...7...60 | தி. – பு. | திருவாடிப்பூர மஹோத்ஸவம் |
| 28...7...60 | வி. | ஊர்கோலத்திருநாள் |
| 24...7...60 | ஞா. | பிரதிவாதி பயங்கரம் அண்ணா |

### சார்வரிஸு ஆவணிமீ

| | | |
|---|---|---|
| 16...8...60 | செ. | மாதப் பிறப்பு |
| 18...8...60 | வி. | ஏகாதசி |
| 22...8...60 | தி. | அமா. |
| 5...9...60 | தி. | பவித்ரோத்ஸவாரம்பம் |
| 13...9...60 | செ. | ஸ்ரீஜயந்தி |
| 14...9...60 | பு. | உறியடி |
| 3...9...60 to 12...9...60 | ச. – தி. | பெரியவாச்சான் பிள்ளை யுத்ஸவம் |

### சார்வரிஸு புரட்டாசிமீ

| | | |
|---|---|---|
| 16...9...60 | வெ. | மாதப் பிறப்பு ஏகாதசி |
| 20...9...60 | செ. | அமா. |
| 21...9...60 | பு. | நவராத்ரி ஆரம்பம் தேசிகோத்ஸவாரம்பம் |
| 29...9...60 | வி. | மஹாநவமி |
| 30...9...60 | வெ. | விஜயதசமி தேசிகர் |
| 1...10...60 | ச. | ஏகாதசி |
| 4...10...60 | செ. | பௌர்ணமி |
| 7...10...60 | வெ. | வெள்ளிக்கிழமை |
| 14...10...60 | வெ. | வெள்ளிக்கிழமை |
| 16...10...60 | ஞா. | ஏகாதசி; மணவாள மாமுனிகளுத்ஸவாரம்பம் |

### சார்வரிஸு ஐப்பசிமீ

| | | |
|---|---|---|
| 17...10...60 | தி. | மாதப் பிறப்பு துவா. மணவாள மாமுனிகளுத்ஸவம் 2 |

19...10...60 பு. ஹஸ்தம் தீபாவளி பொய்கையார் பிள்ளைலோகா சாருத்ஸவாரம்பம்
20...10...60 வி. அமாவாஸ்யை
21...10...60 வெ. வெள்ளிக்கிழமை
25...10...60 செ. மணவாளமாமுனிகள்
26...10...60 பு. மண.. இயற்பா சாத்து முறை
28...10...60 வெ. பொய்கையாழ்வார், பிள்ளை லோகாசார்யர்
29...10...60 ச. பூதத்தாழ்வார், பேயாழ்வார்
30...10...60 ஞா. ஏகாதசி
3...11...60 வி. பௌர்ணமி
4...11...60 வெ. வெள்ளிக்கிழமை
11...11...60 வெ. வெள்ளிக்கிழமை
15...11...60 செ. ஏகாதசி
22...10...60 ச. திருவிசாகம்

சார்வரி௵ கார்த்திகை௴

16...11...60 பு. மாதப்பிறப்புஹஸ்தம்
18...11...60 வெ. அமாவாசை
19...11...60 ச. தாதாசாரியார்
20...11...60 பு. கலியன், நம்பிள்ளையுத்ஸவாரம்பம்
24...11...60 வி. திருவோணம்
25...11...60 வெ. வெள்ளிக்கிழமை
29...11...60 செ. ஏகாதசி
30...11...60 பு. கைசிகத்வாதசி
2...12...60 வெ. கலியன் நம்பிள்ளை
3...12...60 ச. ஸ்ரீபாஞ்சராத்ரதீபம் திருப்பாணாழ்வார்
18...11...60 வெ, திருவிசாகம்
21...11...60 தி. திருமூலம்

சார்வரி௵ மார்கழி௴

15...12...60 வி. சாபரவி 20, 42
17...12...60 ச. கோயில் திருநெடுந்தாண்டகம்
18...12...60 ஞா. அமா. பகற்பத்து தொடக்கம்
27...12...60 செ. பகற்பத்து சாத்து முறை
28...12...60 பு. வைகுண்டஏகாதசி
6... 1...61 வெ. இராப்பத்து சாத்துமுறை
7... 1...61 ச. இயற்பா ,,
8... 1...61 ஞா. திருப்பல்லாண்டு தொடக்கம்
4... 1...61 பு. ஆண்டாள் நீராட்டம் தொடக்கம்
13... 1...61 வெ. ஏகாதசி போகி திருக்கல்யாணம்
16...12...60 வெ. திருவிசாகம்
19...12...60 தி. திருமூலம் (புச்சம்)
12... 1...61 வி. திருவிசாகம்
18...12...60 தொண்டரடிப்பொடியாழ்வார்.

சார்வரி௵ தை௴

14... 1...61 ச. ஸங்க்ராந்தி ஊர்கோலம்
15... 1...61 ஞா. சீவரம்பார்வேட்டை
18... 1...61 பு. திருவோணம்
20... 1...60 வெ. வெள்ளிக்கிழமை
23... 1...61 தி. ரதஸப்தமி
27... 1...61 வெள்ளி ஏகாதசி
29... 1...61 ஞா. வனபோஜனம்
31... 1...61 to 2... 2...61 செ. பு. வி. { தெப்பவுத்ஸவம் ,, தையில்மகம்
3...2...61 வெ. வெள்ளிக்கிழமை
5... 2...61 ஞா. கூரத்தாழ்வான்
10... 2...61 வெ. வெள்ளிக்கிழமை
11...2...61 ச. ஏகாதசி

சார்வரி௵ மாசி௴

12... 2...61 ஞா. மாதப்பிறப்பு
14... 2...61 செ. திருவோணம்
15... 2...61 பு. அமாவாசை
17... 2...61 வெ. வெள்ளிக்கிழமை
24... 2...61 வெ. திருக்கச்சிநம்பி
25... 2...61 ச. தென்னேரித் தெப்பம்
26... 2...61 ஞா. ஏகாதசி குலசேகராழ்வார்
1... 3...61 பு. ராஜகுளத்தெப்பம்
3... 3...61 வெ. } தவனவுத்ஸவம்
4... 3...61 ச.
5... 3...61 ஞா.
10... 3...61 வெ. வெள்ளிக்கிழமை
13... 3...61 தி. ஏகாதசி திருவோணம்

சார்வரி௵ பங்குனி௴

14...3...61 செ. மாதப்பிறப்பு
16...3...61 வி. அமாவாசை
17...3...61 வெ. உடையார்பாளையம் ஸம்வத்ஸராதி
24...3...61 வெ. வெள்ளிக்கிழமை
25...3...61 to 31...3...61 { பங்குனி யுத்தரத் திருநாள்
1...4...61 ச. கந்தபொடி வஸந்தம்
3... 4...61 to 10... 4...61 { பல்லவோத்ஸவம்
11... 4...61 செ, ஏகாதசி

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

நிகழும் சார்வரிஸு சித்திரைமீ ஸ்ரீபெரும்பூதூ ரெம்பெருமானார் மஹோத்ஸவத்தில் 24—4—60உ முதல் 5 நாள் நடந்த விசிஷ்டாத்வைத வித்வத் பரிஷத்தின் உபக்ரமத்தில் ஸபையில் வாசிக்கும்படி

## ஸ்ரீமத் உ. வே. ராவ்ஸாஹிப். S. ராகவையங்கார் ஸ்வாமி

(26, பாஜுல்லா ரோட், தி. நகர்.)

அவர்கள் எழுதியனுப்பிய ஸ்ரீமுகம் வருமாறு :—

ஸ்ரீ காஞ்சீபுரம் P. B. A. ஸ்வாமிக்கு இப்போது எழுபதாவது திருநக்ஷத்திரம் செல்லுவதாக நினைக்கிறேன். இந்த ஸ்வாமி ஐம்பது வருஷங்களுக்கு மேலாகப் பல பாஷைகளில் புஸ்தக வெளியீடுகளாலும் மாதப்பத்திரிகை வெளியீடுகளாலும் உலகுக்குச் செய்துவரும் உபகாரம் ஒப்பும் உயர்வுமில்லாதது. ஸ்வாமி திருக்கையால் எழுதி அச்சிட்டிருக்கிறவைகளையெல்லாம் ஒரு வரியும் விடாமல் வாசிக்கவேணுமானால் ஒரு புருஷாயுஸ்ஸு போதாதென்பதை நான் மட்டுமல்ல, என்னோடு வார்த்தையாடும் பல ஆப்தர்களும் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஸ்வாமிக்கு க்ரந்தஸ்த விஷயங்களில் நோக்கேயொழிய வ்யக்திகளின்மீது நோக்கே கிடையாது. வெளிவந்த விஷயம் அஸங்கதம் என்று ஸ்வாமியின் மனத்தில் பட்டால் அதை யெழுதினவர் யாராகவாவது இருக்கட்டும்; ப்ரசண்ட பண்டிதராகவு மிருக்கட்டும். விஷயத்திலுள்ள அஸம்பத்தங்களைக் கண்ணாடிபோல் எடுத்துக் காட்ட ஸங்கோசப்பட மாட்டார், கூசமாட்டார். எதிரிகள் கண்டிக்கக்கூடிய நிலையிலும் எழுதமாட்டார்.

ஸமீப காலத்தில் ப்ரஹ்மஸ்ரீ. அனந்தக்கிருஷ்ண சாஸ்திரிகளும், மயிலாப்பூர் ஸம்ஸ்கிருத காலேஜ் ப்ரொபஸர் ஸ்ரீ போலஹம் ராமா சாஸ்திரிகளும் நம்முடைய விசிஷ்டாத்வைதக் கொள்கைகளின்மேல் மறுப்பாக எழுதி வெளியிட்டிருந்த விஷயங்களை நம் P. B. A. ஸ்வாமி வெகு விரைவில் கண்டித்து வெளியிட்டிருக்கிற நூல்களைப் பாராதவர்களுண்டோ? அந்த சாஸ்திரிகளிருவரும் ஸம்ஸ்கிருத பாஷையி லெழுதியிருந்தபடியால் அதற்குச் சேர ஸ்வாமி ஸம்ஸ்கிருத பாஷையிலேயே பதில் எழுதி வெளியிட்டதோடு நில்லாமல், விஷயங்களை யாவரும் புரிந்துகொள்ள வேணுமென்கிற கருணையினால் தமிழிலும் வெகு விரிவாக எழுதி (ஸ்வாமி) வெளியிட்டிருக்கிறார். மேலே குறிப்பிட்ட சாஸ்த்ரிகளில் முதல்வர் மட்டும் நம் ஸ்வாமியின் நூலுக்கு ஏகதேசம் பதில் எழுதுவதாகப் புறப்பட்டு பரீக்ஷா என்றொரு சிறு நூலெழுதி வெளியிட்டு உடனே ஸ்வாமியினுடைய விஸ்தாரமான மறுப்பு நூலைப்பெற்று சாந்தரானார். மற்றொருவரான போலஹம் சாஸ்திரிகள் ஒன்றுமே பதிலெழுத முடியாமல் நின்றுவிட்டார். ஆனாலும் ஸ்வாமி பேருக்கு நேராக 'ஸ்வாபிப்ராய ஸமர்த்தநம்' என்றெழுதி, அதற்கும் விரிவான மறுப்பைப் பெற்றுநின்றார். அந்த மறுப்பு அம்ருதலஹரியில் அச்சாகி, தனிப் புத்தகமாகவும் வெளிவந்து உலகுக்கு ஞானச் சுடர்விளக்காக விளங்கிவருகின்றது.

இவர்களிடையில் ஸ்ரீ வைஷ்ணவைகதேசிகளும் எதையாவது அஸங்கதமாக எழுதிக்கொண்டு உடனுக்குடனே நம் P. B. A. ஸ்வாமியின் ப்ராமாணிக ப்ரத்யுத்தரங்களினால் உலகம் தெளிவுபெறும்படியாகி வருகிறது. இவ்விஷயத்தில் ஸ்வாமி செய்துவரும் வெளியீடுகள் இன்னும் நூறு வருஷகாலத்திற்கு யாரும் எவ்விதமான ஆக்ஷேபமும் செய்யமுடியாத வகையில் அமைந்திருப்பதை அறியாதவரில்லை.

விசிஷ்டாத்வைத வித்வத் பரிஷத்து வெற்றிகரமாக நடைபெறுமாக.

---

ஸ்ரீ:

# மதுரோக்தி மஞ்ஜரீ

[ஸ்ரீமான் தி. வி. சிங்கராசாரியர், உபயவேத கண்டீரவ:
20, தெற்கண்டை மாடவீதி, சின்னகாஞ்சீபுரம்.]

---

புராணங்களை வாசித்துக் கொண்டு போம்போது ஒரு விநோதமான கதை சொல்லப் படுகிறது. அதாவது, பிரமன் சிவன் முதலான தெய்வங்கள் தங்களைக் கனக்க உபாஸித்து நிற்குமவர்களுக்கு விளைவதறியாமல் தலைகால் தெரியாதபடி வரங்களைக் கொடுத்துவிட்டு ச்ரமப்படுவதும், 'ஏனோ இப்படி வரம் கொடுத்தோம்' என்று அநுதபிப்பதும், எம்பெருமானை யடிபணிந்து அதற்குப் பரிஹார வழிதேடுவதுமான கதைகள் காணப்படுகின்றன. இக்காலத்தில் நாம் காணும் கதையோ மிக விசித்திரமாயிருக்கின்றது. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி தாமாகச் சென்று ஒருவரிடத்திலும் தம்மை ப்ரசம்ஸிக்க வேணுமென்று ஒருகாலும் கேட்டுக் கொண்டதில்லை. கேட்டுக்கொள்ள ப்ரஸக்தியுமில்லை. "ஸம்பந்நாந் ஸ்வாத்மலாப:" என்கிற கணக்கிலே அவரவர்கள் தாங்கள் தாங்களாக ஸத்தை பெறுவதற்கென்று அபரிமிதமாய் ப்ரசம்ஸித்து எழுதிவிடுவதும், தங்களுக்கு வேண்டாத தத்வார்த்தங்கள் நமது ஸ்வாமி மூலமாக வெளிவந்தவாறே அவற்றுக்கு விடை கூறிப் பிழைக்க யோக்யதையில்லாமையாலே ஏற்கெனவே செய்த ப்ரசம்ஸைகளை மறந்து அஸ்தானே நிந்திக்கப் புறப்படுவதும் இன்னும் ஏதேதோ செய்வதுமாயிருக்கிறார்கள். அந்தோ! இவற்றால் என்னாகுமென்பதை யறிய விவேகமில்லை யொருவர்க்கும்.

திருவையாறு காலேஜில் வியாகரணோபாத்யாயராக இருந்து விச்ராந்தி பெற்றுச் சில வருஷமாக இங்கே க்ஷேத்ரவாஸம் செய்ய வந்து ஆனைகட்டிவீதியில் வாழ்கின்ற ஸ்ரீஉவே. வேளியநல்லூர் ஸ்ரீநிவாஸதாதாசாரியாரென்பவரைப் பற்றி ஒரு சிறுவார்த்தை. ஸ்ரீஸ்வாமி வேதாத்யயநஸர்வஸ்வமென்கிற வேதலக்ஷணக்ரந்தமெழுதி ப்ரசுரம் செய்த காலத்தில் அதைப் பரிபூர்த்தியாக வாசித்த இந்த ஸ்வாமி தம்முடைய ஆத்மாவே தம்மைத் தூண்ட வெழுந்து "ஸூர்யசந்திரர்கள் உதித்த நாள்முதல் வேதத்தில் இப்படிப்பட்ட ஆச்சரியமான விமர்சம் எந்த மதத்திலும் யாருமே செய்தது கிடையாது" இத்யாதிகளை யதேஷ்டமாக எழுதி ப்ரசுரம் செய்வித்தார். பிறகு அவரே சில பேருடைய கோபதாபங்களுக்கு இலக்காகியும் அவர்களுடைய நிர்ப்பந்தங்களை நிராகரிக்க முடியாமலும் "அண்ணங்கராசாரியர் வேதத்தில் செய்திருக்கிற எல்லா விமர்சங்களையும் நான் ப்ரசம்ஸித்து விட்டதாக உலகம் நினைக்க வேண்டாம்; வேதபாஷ்யங்களிலும் வேதலக்ஷணங்களிலும் அவர் குறை கூறி யிருப்பவை தவிர மற்ற ஆராய்ச்சிகளைத்தான் நான் பிரசம்ஸித்தேன்" என்று அவர்களுக்குக் கைக்கடிதமெழுதிக் கொடுத்து ஒருவாறு பிழைத்தார்.

ப்ரஸங்காத் மற்றொரு விஷயமும் தெரிவிக்கலாகிறது. ஸ்ரீமத் பரமஹம்ஸ கோழியாலம் ஸ்வாமியின் ஸஹோதரரான கோழியாலம் ஸ்ரீநிவாஸாசாரியரென்பவர் இப்போது இவ்விடமேயிருந்து கொண்டு வேதபாராயண கைங்கரியம் செய்து வருகிறாரன்றோ. இவர் வேதாத்யயந ஸர்வஸ்வ விவாதங்கள் நடந்த காலத்தில் மைஸூர் ஸ்ரீபரகாலஸ்வாமி மடத்தில் நற்போது போக்கிக்கொண்டு சிலவாண்டுகள் வாழ்ந்து வந்தார். அப்போது அவர் அண்ணா ஸ்வாமியின் வேதலக்ஷண விசார நூல்களை யெல்லாம்பெற்று அடிக்கடி ஸ்ரீமத் பரகாலஸ்வாமி திருவடிகளிலும் இதன் தத்துவங்களை விண்ணப்பம் செய்து கொண்டிருப்பராம். அந்த ஸமயத்தில் ராஜமன்னார் ஸன்னிதியில் நடந்த வேதலக்ஷண விசாரஸபை ஸம்பந்தமாக அண்ணாஸ்வாமி வெளியிட்டிருந்த பரமார்த்த பரித்ராணக்ரந்தத்தை வாசித்து "யோ ப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்.........என்ற காலம் முதலாக இன்றுவரையில் ஒருவராலும் விமர்சிக்கப்படாத அத்யாச்சர்யமான விஷயங்களை யுபகரித்து லோகோபகாரம் செய்து வருவதற்கு என்ன ப்ரத்யுபகாரம் பண்ணப்போகிறேன்" என்று ஸ்வாமிக்கு கடிதமெழுதின வரலாறுகள் ஸ்வாமியின் தன்சரிதையில் (பக்கம் 148ல்) விசதம்.

மனப்பூர்வமாக ப்ரசம்ஸித்தவர்களில் ஒருவருடைய் தாக்ஷிண்யத்திற்கும் கட்டுப்படாமலும், ஒருவருடைய கோபதாபங்களையும் லக்ஷியம் செய்யாமலும் தாங்களெழுதிய ப்ரசம்ஸைகளைக் கல்வெட்டாகவே ஆக்கி வைத்தவர்கள் ஸ்ரீமத் கபிஸ்தலம் ஸ்வாமி, லக்ஷ்

புரம் ஸ்வாமி, ஸ்ரீரங்கம்—தென்பரையாண்டவன் ஸ்வாமி, ஸர். எஸ். வரதாசார்ய ஸ்வாமி
முதலான பல மஹான்கள் ப்ரஸித்தர்களாயிருக்கின்றார்கள்.

வித்வத்கோஷ்டியில் சேர்ந்தவர்கள் முதலில் ஸ்நேஹிகளாயிருந்து, பிறகு சிலருடைய
போதனையினால் எதிரம்பு கோக்கவந்து, பிறகு ஸ்வாமி திருக்கையால் வெளிவந்த ப்ரத்யுத்தர
சரமாரிகளால் திணறி இன்னது செய்வதென்று தோன்றாமல் க்ஷமாப்ரார்த்தனா பத்ரிகை
களையெழுதி உலகமறியப் பிரசுரம் செய்து போனவர்கள்

ஸ்ரீமத். திருவஹீந்திரபுரம் சேட்லூர் நரஸிம்ஹாசாரியார்
" திருக்குடந்தை ராயம்பேட்டை கிருஷ்ணமாச்சாரியார்
" திருச்சி பிரபல அட்வகேட் ஏ. வி. கோபாலாச்சாரியார்

ஆக இம்மூவரும் பரிகணிதரானவர்கள். இவர்களில் முதல்வரான சேட்லூர் நரஸிம்ஹாசாரி
யார் க்ஷமாப்ரார்த்தனாபத்ரிகை எழுதிக்கொண்டதோடு நின்றுவிட்டார். மற்ற இருவரும்
அவ்வளவோடு நில்லாமல் மேன்மேலும் ஸ்வாமியோடு ஸ்நேஹத்தை அபிவிருத்தி செய்து
கொண்டு ஸ்வாமியின் நிரூபணங்களை மிகவும் கொண்டாடினவர்கள்.

இதெல்லாம் வெறுமனே வாய்பேச்சாகச் சொல்லிவிடுவதன்று, கைபோன போக்கில்
எழுதிவிடுவதன்று. ஒவ்வொரு விஷயமும் அப்போதைக்கப்போது வெளிவந்துள்ள நூல்
களில் சிலாசாஸனமாகியிருப்பதாலும், ஸ்வாமியின் 'தானேயெழுதிய தன் சரிதை'ப் புத்த
கத்தில் ஸப்ரமாணமாக நன்கு விளக்கப்பட்டிருப்பதாலும் யாரும் மறுவாய் திறக்கமுடியாது.

1951-ஆம் வருஷத்தில் (அண்ணா) ஸ்வாமிக்கு ஷஷ்டியப்தபூர்த்தி நடந்தபோது தந்
நிர்வாஹகஸமிதிக்குத் தலைவராயிருந்த சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ் கனம் W. கிருஷ்ண
ஸாமி நாயுடு அவர்கள் சாச்வதமான நினைவு மலர் ஒன்று வெளியிட விரும்பி "காஞ்சீபுரம்
ஸ்வாமிகளிடத்தில் ஈடுபாடுள்ள வித்வான்களும் அன்பர்களும் தங்களுக்கு விருப்பமான
துறையில் கட்டுரைகள் எழுதியனுப்பலாம்" என்று கெஜட்டுகளில் பிரசுரம் செய்வித்திருந்
தார்கள். அப்போது நூற்றுக்கணக்கான பெரியார்கள் மனங்கனிந்து பல பாஷைகளிலும்
எழுதியனுப்பிய ப்ரசம்ஸாவியாஸங்கள் பெரிய புத்தகமாக வெளிவந்திருக்கின்றன. வெளி
யூர்களிலுள்ளார் எழுதுகின்றவற்றைக் காட்டிலும் காஞ்சீபுரத்திலேயே ஸ்திரவாஸிகளாயிருப்
பவர்கள் எழுதுமவற்றுக்கு விசேஷமான வீறு உண்டாகையாலே சின்ன காஞ்சீபுரம் ஸன்
னிதி வீதியில் வாழ்பவரான ஸ்ரீமான் உ.வே. நடாதூர் தேவநாத ஐயங்கார் (ரிடைர்ட் ஹெட்
மாஸ்டர்) அவர்கள் உள்ளமுருகி யெழுதிய கட்டுரையும் பாமாலையும் அப்போது ஸபிகர்கள்
மிகவும் கொண்டாடத் தக்கவையாயிருந்தன. அவ்விரண்டும் அப்படியே யிங்கு வெளியிடப்
படுகின்றன. இதனால் ஸ்வாமிக்கு அபூர்வமானதொரு வைபவம் விளைவதாகக் கருதி இது
வெளியிடுகிறபடியன்று. இப்போது அவர்கள் அந்தக் கட்டுரையும் பாமாலையும் நானெழுதிய
தல்ல என்று மறுக்க முன்வரமாட்டார்கள். ஆனால் "அப்போதிருந்த சித்தவ்ருத்தி வேறு;
இப்போதிருக்கும் சித்தவ்ருத்திவேறு" என்று மட்டும் சொல்லக்கூடும். இதை அவர்கள்
சொல்லித் தெரிந்துகொள்ள வேண்டியதில்லை, சொல்லாமலே யாவருமறிவர். இயற்கை
யான அபிப்பிராயத்தினுடையவும் செயற்கையான அபிப்பிராயத்தினுடையவும் மதிபயின்
ஏற்றத்தாழ்வுகளை அறியாதாரில்லை.

சர்ச்சையிலிருக்கும் விஷயங்களுக்கு நேரான முறையில் பதில் தெரிவிக்க முடியாமைக்
காக மனம் போனபடியெல்லாம் நிந்தனை செய்வதென்பது வழிதப்பிச் செய்யும் செயலாகும்.
அநாமதேயத் துண்டுப் பிரசுரங்களினால் ஸ்வாமியைப்பற்றியும் பூருவாசாரியர்களைப்பற்றியும்
நிந்தனைகளை வெளியிட்டு விட்டால் விஷயங்களில் வெற்றிபெற்றதாய் விடுமோ?

உங்களில் ஸ்ரீமான் D. T. தாதாசாரியாரும், ஈகை வேதாந்த தேசிகாசாரியாரும்
ஏதோ விஷயங்களுக்கு பதில் எழுதுவதுபோல வெழுந்து இருவரும் இரு சிறுநூல்கள்
வெளியிட்டார்கள். அவற்றுக்கு அடுத்த க்ஷணத்திலேயே பரிபூர்ணமான மறுப்பு வெளி
வந்திருக்கின்றது. அதன்மேல் விஷயங்கள் சொல்ல சக்தியில்லையென்றால் வாளாகிடப்பது
உசிதமேயல்லது வீணான அவதூறுகளை நிரப்பித் துண்டுப் பிரசுரங்களை நித்தியமும் ஒவ்
வொன்றாகச் செய்து கொண்டிருப்பது எவ்வளவு அழகியதென்பதை நாமோ சொல்ல
வேண்டும். நேரான வழியில் பதில் சொல்லகில்லாரிவர்கள் என்பதே ஊர்ஜிதமாகும்.

ஸ்ரீ:

காஞ்சீ மண்டலவாஸிகளான ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப்
பிரதிநிதியாக, தேவப்பெருமாள் ஸன்னிதி வீதி,
நடாதூர் தேவநாதய்யங்கார்
ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் மகா வித்வான்

## அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவ ஸமயத்தில் ஸமர்ப்பித்துக்கொண்ட

# அபிநந்தன பத்திரிகை

1. ஸாக்ஷாத் பிரமதேவன் ஆணையை முன்னிட்டுத் தெய்வத் தச்சனாகிய விச்வகர்மாவால் நிர்மாணம் செய்யப்பட்டது இக் காஞ்சீபுரி. இஃது இன்றும் அன்று போல் பிரகாசிக்கிறது. ஆங்கிலப் படிப்பினால் ஜீவனார்த்தமாக நம்சிறூர் பலர் வெளி யேறிக் காலங்கழிக்க ஏற்பட்ட கொடுமையினால் வேதாத்யயனம் இந்நகரில் அடி யோடு இல்லாமல் போகுமோ என்ற பீதி அதிகரிக்கும் காலத்தில், அதைப் போக்கி, முற்காலத்தில் விருத்திராசுரன் வேதத்துடன் கடல்புக்கபோது அக்காலத்தவர் கொண்ட கவலையைப் போக்கின எம்பெருமானைப்போல் இக்காலத்தவர்க்கு வேதத் தைக் கொடுத்துக் கவலைதீர்த்த நம் அண்ணாஸ்வாமிக்கு நாம் என்ன கைம்மாறு செய்யக்கூடும். வேதமறிந்தவரே வேதியர் என்பது இவர் மனங்கொண்ட கொள்கை.

2. தென்னிலங்கைக் கோமான், பார்வதி பதியைப் பாடிப் பரவசப்படுத்திய சாம கானத்தை நாம் செவிகுளிரக் கேட்குமாறு செய்வித்ததும் இம் மஹான் அண்ணாஸ்வாமி அல்லவா!

3. "இளமையிற் கல்" என்னும் முதுமொழி பொய்க்க, முதுமையினும் கற்க லாகும் என்று உலகத்தவர்க்குக் காட்டவேண்டி இருபத்திரண்டு ஆண்டுகளுக்குமேல் வேதத்தைக் கசடறக் கற்றும் கற்பித்தும் விளங்குவது நம் அண்ணாஸ்வாமியைத் தவிர வேறு யார்? இவருடைய உழைப்பும் விடாமுயற்சியும் என்னே! என்று மூக்கில் விரல்வைத்து அதிசயிக்காதவரும் உளரோ!

4. இம்மட்டுமா, த்வாதச ஊர்த்துவ புண்ட்ரப் பெருமையை யறியாதவர்க்கு அதைத் தினந்தோறும் தாம் அணிந்து காட்டித் தேஜோமயமாய் திவ்ய மங்கள சரீரத்தோடு விளங்குவது நம் அண்ணாஸ்வாமியோ வேறுயாரோ!

5. 'எழுத்தறிவித்தவன் இறைவனாகும்" என்பதை மறந்திடாமல், உண்மைப் படுத்தி ஒரு பாடசாலையை நிறுவி வித்யாதானம் செய்து அது செவ்வனே நடைபெற வேண்டிய ஏற்பாடுகள் செய்தது மட்டுமே யல்லாது, தாமே உபாத்தியாயருமாக விருந்து அதற்கு வேண்டிய பொருளைச் சேமித்துக் காலந்தவறாமல் கைங்கர்யங்களைச் செய்வித்துவரும் அதிசயத்தைக் கண்டால் மேனாட்டு ஆக்ஸ்போர்ட் முதலிய பல்கலைக் கழகத் தலைவரைப்போல், ஒரு வைதிகப் பிராமணர் நடத்திவருகிறாரே! இவருக்கு இந்தப் பயிற்சி எப்படி, எப்பொழுது, ஏற்பட்டது என்பது வியப்பினும் வியப்பே!

6. சூரியன் உதிக்கச் சற்று காலம் தவறினும், தாம் காலம் தவறாது விடியற் காலையில் வைதிகத்திரளுடன் வலம்வரும் பாக்கியம் இவரைத்தவிர வேறுயார் பெற் றுள்ளார்? கை கால்கள் முதலிய அங்கங்கள் பெற்ற பயனாகத் திருவீதிவலம் வருதல், தேவதாஞ்ஜலி செய்தல், வாயார வரதனைப் பாடிப் புகழ்தல், செவிக்கினிய அவன் நாமங்களைக் கேட்டல், கண்ணார அவனைக் காணுதல் என்பதை இவர் தேவப்

பெருமாள் விஷயத்தில் செலுத்தியதாலல்லவா இவரது பேரும் புகழும் அமோகமாக விருத்தியடைகிறது.

7. வைஷ்ணவர்களில் ஒரு சாரார் தமிழைத் தவிர்ப்பதும் மற்றொருசாரார் ஸம்ஸ்க்ருதத்தைத் தவிர்ப்பதுமாக இருந்தாலும், நம் அண்ணாஸ்வாமி எச்சமய நூலானாலும் சரி, எது விஷயமானாலும் சரி, எல்லாவற்றையும் கற்றறிய வேண்டும் என்று கொண்ட கொள்கை மிகவும் போற்றத்தக்கது. கம்பர், வில்லிபுத்தூரார், வள்ளுவர் முதலோர் ஆக்கிய நூல்களை வைதிக வைஷ்ணவர் கண்ணாலும் காண இசையார்; செவியும் சாய்க்கார்; நம் அண்ணாஸ்வாமியோ புஷ்பம் எங்கிருமாயினும் எங்கே பிறப்பினும் அதிலுள்ள தேன் தெவிட்டாது என்று கண்டு, வண்டு நறுந்தேன் அருந்துவது போல் பலகலைகளையும் கற்று ஞானபிவிருத்தி அடைந்தார். இப்பெருமை இவருக்கே.

8. கோயில்கள் கட்டுவதென்பது மகா ராஜாக்களுக்கும் மடாதிபதிகளுக்குமே சிரம ஸாத்தியமா யிருக்க, இவ்வைதிக பிராமணோத்தமர் அக்கைங்கர்யத்தை ஏற்று அணிபெறச் செய்வித்து, இந்த பஞ்ச காலத்திலும்கூட சிப்பந்திகளுக்கு மன்மூவப்ப ஊதியம்தந்து நிர்வகிப்பது, விந்தையினும் விந்தையே! மஹா சக்தனாலும் கூட நினைக்கமுடியாத அழிவற்ற அரியபெரிய செயல்களைச் செய்பவர் ஒரு சாமானிய மானிடனாக இருக்கவும் கூடுமோ என்பது நமக்குள்ளே உண்டாகும் ஒரு கேள்வி யல்லவா?

9. மற்றும் ஒன்று; சாதாரணமாக வைதீக வித்வான்களை நெருங்குவது என்றால் அது புலியையோ பேயையோ நெருங்குவதைப்போல இருப்பதுடன், அங்கே தேங்காய் பழத்திற்குக் காத்திருக்கும் ஆஷாடபூதிகளும், "இப்படி ஏள்ளா, அப்படி ஏள்ளா" என்றும் "தூர நில்" என்றும், வந்தவரை 'நாம் ஏன் இங்கு வந்தோம்" என்று நினைக்கும்படி மனம் உளையச்செய்கிறார்கள். ஆனால் நம் அண்ணாஸ்வாமியைக் காணப்போனால், சிறியவனானாலும் சரி, பெரியவனானாலும் சரி, படித்தவன் அல்லது பாமரனானாலும் சரி, எக்காலத்திலும் எந்த இடத்திலும் முகமலர்ந்து புன்சிரிப்புடன் வரவேற்று விசாரித்து, ஒரு நிமிஷங்கூடக் காக்க வைக்காமல் செயல் முடித்து அனுப்புவதைக் கண்டால், இவர் ஆங்கில நாட்டிலுள்ள உயர்ந்த உத்யோகஸ்தருடன் மிகவும் பழகியிருக்க வேண்டும் என்கிற எண்ணம் எவருக்குத் தான் உண்டாகாது!

10. இதுநிற்க, ஒரு சொற்பொழிவு என்றால் குறித்த காலத்தில் ஒரு கண்ணிமைப் பொழுதும் பின்னிடாமல் வந்து ஒரு கணப்பொழுதும் வீண் போக்காமலும், காலம் கடவாமலும் வாய்வந்தபடி சொல்லாமலும் கேட்போர் மனங்குளிர உபந்யாசத்தை நிகழ்த்தும் அதிசயத்துக்கு பட்டணத்து உத்யோகஸ்தர்களே சான்றாவார். 'ஸ்வாமி ஏள்ளுகிறார், வந்து கொண்டிருக்கிறார்' என்று ஆள்மேல் ஆள்விட்டு அதனால் ஸ்வாமித்வம் பெறுவது, இவருக்கு மிகவும் அருவருப்பாகும்.

11. சோம்பேறிகளுக்கு உணவளிப்பதோ உதவுவதோ இவரிடம் லவலேசமும் இல்லை. "உழைத்தால் கூலி, இல்லையேல் காலி" என்பது இவரது கொள்கை.

12. சுருங்கச் சொல்லின், ஸம்ஸ்கிருதம் தமிழ் தெலுங்கு ஹிந்தி முதலிய பாஷைகளில் தங்குதடையின்றி உபந்யசிக்கும் சக்தி கலைமகள் அனுக்கிரகத்தால் தான் இவர்க்கு உண்டாயிற்று என்று உறுதியாகச் சொல்வர் சிலர். மற்றும் சிலர் ஆசார்ய கடாக்ஷமே காரணம் என்பர். ஆனால் இவரது பேருக்கும் பெருமைக்கும் காரணம் இவருடைய சலிப்பில்லா உழைப்பும், பேரருளாளன் பரிபூரண கடாக்ஷமும் இவரைப் பெற்றதாய் என்னோற்றாள் கொல் என்னும், பெற்றோர் பெற்ற பாக்கியமுமே ஆகும்.

இப்படிப்பட்ட அரும் பொருளாகிச் செயற்கரிய செய்யும் சீராளனை அறுபது ஆண்டுகள் ரட்சித்த பேரருளாளன் இன்னும் இவரைப் பல்லாண்டுகள் ரட்சிக்கட்டும்.

தீர்க்காயுளும் திடகாத்திரமும் உடையவராகவும், இவர் செய்துவரும் தொண்டுகள் ஒவ்வொன்றும் நிர்விக்கினமாக நடைபெற்று நீடூழி வாழ்விக்கும்படியாகவும், இரு கையுங் கூப்பி உரைக்கும் எங்கள் விண்ணப்பத்திற்குச் செவிசாய்த்து நம் அண்ணு ஸ்வாமியை அநுக்கிரகிக்குமாறு பிரார்த்திக்கின்றனம்.

பெருமாள் கோவில்,
நடாதூர், தேவநாத ஐயங்கார்,
ரிடையர்டு ஹெட்மாஸ்டர்.

காஞ்சீபுரம்,
15—3—51.

## ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளுக்கு ஷஷ்டயப்தபூர்த்தி மஹோத்ஸவத்தில் ஷ நடாதூர் தேவநாதய்யங்கார் சூட்டிய பாமாலை

1. பூவிலோன் புனிதமாய புண்டரீகாக்ஷன் காண
வாவுமா மேதமாக்கி வானவரானோர் சூழத்
தேவிமா ரிருவர் கூடத் தேவாதி ராஜன்சேவை
மேவி மானிடர்கட் கெல்லாம் மனமுறவளித்த கச்சி.

2. கச்சியம் பதியில் தோன்றிக் கலைபல கற்று மேலோர்
மெச்சிட வாழவந்த மேதாவி அண்ணு வென்னின்
நச்சிடப் பலருமுண்டு நாமகளருளுண் டென்னின்
இச்சபை சொல்லுமாதை இருகண்ணால் காண்மினீரே.

3. பகலவன் தோன்றுமுன்னர் பன்னிருநாமம் சாத்திப்
பல்கலைக் கழகம் புக்குப் பரிவுடன் பாடமூட்டி
இகலவன் பெருமான் சேவைக்கேகி யங்கிருந்து வாழ்த்தி
நலமுடன் நல்லாகாரம் நாளுமே கொள்ளும் நல்லான்.

4. தன்பெரு முயற்சியாலே தனிப்பெருங் கோயிலாக்கி
நம்பிள்ளை நிலையம்புக்கு நாவார வாழ்த்திப்பின்னை
தன்பிள்ளை போலக்காக்கும் தனையரோடளவளாவி
இன்புற்று வாழ்வதன்றோ இவர்பெறும் மகிழ்ச்சியம்மா!

5. 'இளமையிற்கல்' லென்மாற்றம் ஏய்த்திட விரும்பிதெய்தி
வளமுறு வேதமேழும் வளர்ந்தபின் கற்றநம்பி
பளபள வென்ன வாடைப் பவித்திரமாகச் சாத்தி
இளையவ னிவனே யென்ன இருப்பது இவர்தம் கொள்கை.

6. தமிழொடு தெலுங்கு ஹிந்தி யாங்கிலத் தேவபாஷை
கமழுமின் சொற்களோடு கவினுறப் பொழியுமாற்றல்
இமயமோ டிளையாள்வாரி இடமுடை யவனியெல்லாம்
கமழுமே யென்று போற்றின் காதலாலல்ல காணீர்!

7. உபயவே தாந்தச்சோதி உத்தமன் தூப்புல் வந்த
மலையவ னருளினலே மாற்றலர் மருண்டே யோடச்
செயவலன் என்றபட்டப் பெயர்கொண்ட வழியில் வந்தால்
எவரிவர்முன்னே நிற்பார்? எதிர்மொழி இயம்புவாரார்?

8. அண்ணனர்க காறுபத்தி ஞண்டுகள் அளித்துக் காத்த
மின்னனு ளிலங்குமார்பன்மாயனு ராசிபெற்றுப்
பொன்னனர் செல்வம்தந்து பெரும்புகழ் தந்துமற்றும்
எம்மனர் காண என்றும் இன்புற்று வாழ்க! வாழ்க!!

ஸ்ரீ காஞ்சிபுரி,
15—3—51.

பெருமாள் கோவில் நடாதூர் தேவநாத அய்யங்கார்,
ரிடையர்டு ஹெட்மாஸ்டர்.

**Rgd. No. 2975** **ஸ்ரீராமாநுஜன்**

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

(2) காராலபாடி ராதாகிருஷ்ணய்யா,
229, கோவிந்தப்ப நாயகன் தெரு, மதராஸ்—1

(3) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்ரிபேட்டை, மதராஸ்—2

(இவர் சென்னையில் பிரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

Sri. Vangeepuram,
Raghavacharya Swami,
[illegible] (Mysore Distt.)

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press
Sannidhi Street, L. Kancheepuram.